ஓம்

திருச்சிற்றம்பலம்

# செந்தமிழ்ச் செல்வி

திருநெல்வேலித் தென்னிந்திய

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தினின்றுந்

திங்கள்தோறும் வெளிவருவது

சிலம்பு ய } மெய்கண்டான் யாண்டு-எாய கார்த்திகைத் திங்கள் 1932ஆ நவம்பர்மீ—டிசம்பர்மீ { பரல் கக

திருச்சிற்றம்பலம்

## திருநாவுக்கரசு சுவாமிகள் தேவாரம்

அத்தாவுன் னடியேனை யன்பா லார்த்தா யருளேக்கிற்
றீர்த்தநீ ராட்டிக் கொண்டாய்
எத்தனையு மரியநீ யெளியை யானா யெனையாண்டு
கொண்டிரங்கி யேன்று கொண்டாய்
பித்தனேன் பேதையேன் பேயே னாயேன் பிழைத்தன
களத்தனையும் பொறுத்தா யன்றே
இத்தனையு மெம்பரமோ வையவையோ வெம்பெருமான்
றிருக்கருணை யிருந்த வாறே.

பதவுரை:—

*அத்தா—எனது தந்தையே*

*உன் அடியேனை அன்பால் ஆர்த்தாய்—உனது திருவடிகளில் அன்பு வைத்திருக்கும் அடிமையேனாகிய என்னிடம் நீ அன்பு செய்து எனது உள்ளம் உனது திருவடிகளை விட்டுப் பிரியாது பற்றும்படி கட்டி வைத்தாய்*

அருள் நோக்கில் தீர்த்தம் நீர் ஆட்டிக்கொண்டாய்—(அதுவுமன்றி) உனது அருள் நோக்கமாகிய தூய நீரிலே எனது மலமாகிய அழுக்கு நீங்கும் வண்ணம் முழுகச் செய்தாய்

எத்தனையும் அரிய நீ எளியை ஆனாய்—திருமால் முதலிய அரிய தேவர்களுக்கும் எவ்வளவும் அறியக் கூடாத தன்மையை உடைய நீ ஏழையேனாகிய நான் அறியும் வண்ணம் எனக்கு எளியனாகி

இரங்கி எனை ஏன்று கொண்டு ஆண்டு கொண்டாய்—என் மேல் இரக்கம் வைத்து என்னை உனது அடியவனாக ஏற்று ஆண்டருளினாய்

நான் பித்தனேன் பேதையேன் பேயேன் நாயேன்—நான் உலகப் பற்றுடையவனும் உன்னை அறியாதவனும் பேய் போலவும் நாய் போலவும் இழிதகைமை உடையனாகியும்

பிழைத்தனகள் அத்தனையும் பொறுத்தாய்—செய்த குற்றங்கள் பலவற்றையும் நீ (பொருட் படுத்தாது) பொறுத்தருளினாய்

இத்தனையும்—இத்தனை அரிய பேறுகளையும்

என்பரமோ—(சிறிதும் தகுதியில்லாத ஏழையேனாகிய) என் பொருட்டாகவா ? (அருள் செய்தாய் ?)

ஐய ஐய—என்ன ஆச்சரியம் ! என்ன ஆச்சரியம் !!

எம்பெருமான் திருக்கருணை இருந்த ஆறு (என்)—(இவ்வாறு என் பொருட்டு) எனது தலைவனாகிய நீ செய்தற்கு என் மேல் உனது பேரருள் இருந்த வகையை என்ன (என்று நான் சொல்வேன்?)

விளக்கவுரை :—

அடியேன்—அடிமை என்ற பண்புப் பெயர் அடியாகப் பிறந்த உயர்திணைப் பொதுப்பால் தன்மை ஒருமை குறிப்பு வினையாலணையும் பெயர்; அடிமையாகிய நான். இறைவன் அன்பர்க்கு அன்பன் ஆதலின் அன்பு வைத்திருக்கும் அடிமையாகிய என்னிடம் என்று உரை கூறப் பட்டது.

அருள் நோக்கில் தீர்த்தம் நீர்—நோக்கில் + தீர்த்த நீர். நோக்குபு தீர்த்த நீர். இல் சாரியை. அருள் நோக்கு ஆகிய தீர்த்த நீர்; தீர்த்தம்-தூய்மை.

ஆட்டிக்கொண்டாய்—ஆடுதல்-முழுகல். டகர ஒற்று இரட்டித்து ஆட்டு எனப் பிறவினையாய் வந்தது. "நெஞ்சத்து அழுக்கை எல்லாம் நின்னருட் புனலாற்றுடைத்தனை சுந்தரி நீ நின்னருளேதென்று சொல்வதே" என்று அபிராமி பட்டர் அபிராமி அந்தாதி 27-வது பாட்டில் கூறியருளினமை காண்க.

எத்தனையும் அரிய நீ எளியை ஆனாய்—ஆனாய் என்ற வினைமுற்று வினையெச்சப் பொருளில் வந்தது.

"யாவர்க்கு மேலா மளவிலாச் சிவபெருமான்
யாவர்க்குங் கீழா மடியேனை—யாவரும்
பெற்றறியா வின்பத்துள் வைத்தாய்க்கென் னெம்பெருமான்
மற்றறியேன் செய்யும் வகை"

என்று இந்தக் கருத்தை மாணிக்கவாசக அடிகள் திருவாசகத்தில் கூறியருளினார்.

இரங்கினை என்று கொண்டு ஆண்டு கொண்டாய்—என்று கொண்டபின் அடியவனாக ஆண்டு கொள்ளல் வேண்டும் ஆகலின் ஆண்டு கொண்டு என்று கொண்டாய் என்பதை என்று கொண்டு ஆண்டு கொண்டாய் எனமாற்றிக் கூட்டுச்செய்து பொருள் உரைக்கப்பட்டது.

பிழைத்தனகள்—பிழைத்தன-அஃறிணைப் பலவின்பாற் படர்க்கை இறந்த காலத் தெரிநிலை வினையாலணையும் பெயர்; கள் விகுதிமேல் விகுதி.

பொறுத்தாய் அன்றே—அன்று-ஏ அசைநிலைகள்.

எம்பரமோ—என் + பரம் = எம்பரம். என் + பி = எம்பி என வருதல் போல. பரம்-பொருட்டு, வடமொழி. ஓ வினாப்பொருளில் வந்தது.

ஐய ஐயோ—அடுக்குத்தொடர்; ஐய-வியப்புப் பொருளைத்தரும் இடைச்சொல். ஓ-அசைநிலை.

எம்பெருமான் திருக்கருணை இருந்த ஆறு என்—என், அவாய்நிலையால் வந்த சொல்லெச்சம். திருக்கருணை அருளோடு கூடியகருணை ; கருணை இரக்கம். ஆறு-வகை.

இந்தத் தேவாரப்பாட்டில் திருநாவுக்கரசு அடிகள் இறைவன் தம்மைச் சமணசமயப் படுகுழியினின்று கரையேற்றி ஆண்டு அருள் செய்ததை நினைந்து வியப்பு அடைந்து அவனைத் துதிக்கின்றார்.

மா. வே. நெல்லையப்ப பிள்ளை.

---

# தமிழ் அறிவியற் சொற்கள்

## Geometry - வடிவளவை

[திரு. பா. வே. மாணிக்க நாய்க்கர் அவர்கள்]

(௩௪௨. பக்கத் தொடர்ச்சி)

Calipers அல்லது Caliper Compasses என்பது ஒரு பொருளின் குறுக்களவை உள்ளாகவும் புறமாகவும் எடுக்க உதவுவது.

| | |
|---|---|
| *Calipers* | ... கப்பு காலி |
| Outside caliper | ... தொட்டிக்காலி |
| Inside caliper | ... படப்புக்காலி |
| Ink leg of a compass | ... பிளவுகாலியின் மைக்கால் |
| Pencil leg of a compass | ... பிளவுகாலியின் குறிக்கால் |

"Set Squares" என்று கூறுவது வடிவளவையின் ஒரு மரபுச் சொல்லாகும். அவைகள் (Square) செவ்வறையல்ல; ஆனால் ஒரு முடக்குச் செம்முடக்கா யமைந்தவை. அவைகள் செவ்வறை முழுமுடக்கி போன்ற உருவங்களின் முடக்குகளை யளக்கப் பயன்படுவதால் இப்பெயர் பெற்றன.

அறிவியற் சொற்களை யமைக்கப் புகுவாஞெருவன் மரபுச் சொற்களை யொழித்துச்சொல்லமைக்கக் கருதுவது கடினமாகும். அவ்வாறு முயல்வதால் சுருங்கச் சொல்லல் என்ற சிறந்த பண்பைக் கைவிடவேண்டியதாக முடியும். எனினும் மரபுச் சொற்களா யமைந்தவைகள் கூட அவ்வப் பொருள்களின் பண்பை இயன்றவரை விளக்குவதாயிருத்தல் நலம். அதை விட்டு குறித்த பொருளின் இயற்கைப் பண்புக்கே நேர்மாருன பொருளைத் தெரிப்பதாக இருப்பின் அது இடர்விளைக்கக் கூடியதாகும். வெள்ளை நிறமைந்த ஒரு ஆங்கிலேயனை மிஸ்டர் பிளெஅக் (கறுப்பன்) என்றோ, நெட்டையான ஒருவனை மிஸ்டர் ஷார்ட் (குட்டையன்) என்றோ, பழைய நண்பனொருவனை மிஸ்டர் நியூமெஅன் (புதுமகன்) என்றோ விவரித்து உண்மை யுணர்தல் கூர்ந்த அறிவிலார்க்கியலாததாகும். எனவே இத்தகைய மரபுச் சொற்களைக் கையாளும்

போதும் இயன்றவரை பொருள் மாருட்டம் இல்லாதவாறு திருத்தி ஏற்றவாறு அமைத்துக் கொள்ளல் நேரிதாம்.

முடக்குகளை யளப்பதற்கு நம்மனோர் கையாண்ட கருவியின் பெயர் மூலைமட்டம் அல்லது மூலைமட்டப்பலகை. இது Set Squares போன்ற உருவமைந்ததே. இதுவே சரியான தமிழ் நேர்ச் சொல்லாகும்.

45° Set Square - 45° திக்கிரி மூலைமட்டம், அரையரங்கு மூலைமட்டம்

60° Set Square - 60° திக்கிரி மூலைமட்டம், அரைமாட மூலைமட்டம்

Tee Square - டானமட்டம், டானமட்டப்பலகை.

உருண்டையான தலையோடு கூடிய Pin என்பது குண்டூசி என்று கூறப்படுகிறது. இது ஒருவகையில் சரியே. ஆயினும் அச்சொல்லில் அவ் வூசியின் தலையின் வடிவுமட்டுங் குறிக்கப் படுகிறதே யொழிய ஊசியின் தொழிற் பண்பு குறிக்கப்படவில்லை.

Needle என்பது ஊசி; கண் என்று சொல்லப்படும் Eye என்பதோடு கூடிய Needle, காதூசி. ஊசியின் கண் என்று ஆங்கிலத்திற் கூறப்படுவதற்கும், காது என்று தமிழிற் கூறப்படு வதற்குமுள்ள பொருள் வேற்றுமை தெள்ளிதிற் புலனும்.

எனவே ஒரு சொல்லை யமைக்கப்புகுங்கால் ஒரு பொருளின் தொழிற் பண்பு புலப்படுமாறு சொல்லமைப்பது அதன் வடிவம் புலப்படுமாறு அமைப்பதைவிடச் சாலச் சிறந்ததாகும் என்பது கூருதே போதரும்.

| | | |
|---|---|---|
| *Pin* | ... | பிணையூசி |
| Drawing Pin | ... | ஓவியப் பிணையூசி |
| Safety Pin | ... | உறுத்தாப்பிணையூசி, உறுத்தா ஊசி |
| Coarse needle | ... | முரட்டூசி |
| Fine needle | ... | மெல்லூசி |
| Round needle | ... | உருண்டையூசி |
| Triangular needle | ... | முப்பட்டையூசி |

| | | |
|---|---|---|
| *Tape* | ... | கச்சு, கச்சை, பட்டி, பட்டை |
| Measuring tape | ... | அளவுக் கச்சு, அளவுப் பட்டி |
| *Chain* | ... | சங்கிலி, கொலுசு |
| Measuring chain | ... | அளவுச் சங்கிலி, அளவுகொலுசு |
| 100 foot chain | ... | நூறடிச் சங்கிலி, நூறடி கொலுசு |
| 66 foot chain | ... | அறுப்பத்தாறடிச் சங்கிலி, அறுபத்தாறடி கொலுசு |
| *Link* | ... | கண்ணி, வளையம், பூட்டு |
| Links of a chain | ... | சங்கிலியின் கண்ணிகள் |
| Arrows of a chain | ... | சங்கிலியின் முள் |
| To plant an arrow | ... | முள்ளைக் குத்த |
| *Rod* | ... | கோல், தடி |
| 10 Foot rod | ... | பத்தடிக் கோல் |
| *Peg* | ... | முளை |
| *Arrow* | ... | அம்பு |
| Arrow mark | ... | அம்புக்குறி |
| *Stand* | ... | தாங்கி |
| *Tripod* | ... | முக்காலி |
| Tripod stand | ... | முக்காற்றாங்கி |

Telescope என்பது "தொலைவில்" என்று பொருள்படும் tele என்றசொல்லும், "பார்க்க" என்றுபொருள்படும், skopeim என்ற சொல்லும் சேர்ந்து பிறந்ததாகும். எனவே சுருக்கமாக தொலை காட்டி என்று கூறலாம்.

| | | |
|---|---|---|
| *Telescope* | ... | தொலைகாட்டி |
| *Telephone* | ... | தொலை பேசி |
| *Telemeter* | ... | தொலையளப்பன் |

Telegram என்பது Tele என்ற சொல்லும் Graphine என்ற சொல்லும் சேர்ந்து பிறந்த ஒரு சொல்லாகும். Tele என்றால் "தொலைவில்" Graphine என்றால் "எழுத" என்பது பொருள். நல்ல தமிழ் வழங்கும் ஜில்லாக்களில் "கம்பி" என்றும் கலப்புத் தமிழ் வழங்கும் ஜில்லாக்களில் "தந்தி" யென்றும் இது வழங்குகிறது. இவையிரண்டும் சரியான சொற்களல்ல. Wireless telegram என்ற சொற்களுக்கு இவற்றின்படி "கம்பியில்லாக்

கம்பி" "தந்தியில்லாத்தந்தி" என்று பொருளல்லாப் பொருள் கூறவேண்டும்.

இக் கருவியில் கருத்திற் பதிக்க வேண்டியது தொலை வன்று; ஏனெனில் கடிதம் எழுதினாற் கூட அது பாதாள உலகம் என்று கருதப்படும் அமெரிக்கா முதலிய தொலை நாடுகளுக்குஞ் சென்று சேர்ந்துவிடுகிறது. காலச்சுருக்கமே அதிற் கூர்ந்து நோக்க வேண்டியதாகும்.

| | | |
|---|---|---|
| *Transmission* | ... | விடுத்தல், விடுப்பு |
| Quickness of time | ... | துடி, நொடி, இமை |
| *Vibration* | ... | துடி |

Telegraphy என்பது Vibration என்னுந் துடிமுறையே யாம்.

| | | |
|---|---|---|
| Quick Transmission | ... | துடி விடுப்பு |
| *Telegraph* | ... | துடி விடுப்பு |
| Telegram | ... | துடி விடுப்பு |
| Telegraphist | ... | துடிவிடுப்பர் |
| *Message* | ... | செய்தி |
| Telegraphic message | ... | துடிவிடுப்புச் செய்தி |

மேற்குறித்த இந்நேர்ச்சொற்கள் எவ்வளவு சிறந்ததாகவும் எளிதாகவும், ஏற்றதாகவுந் தோன்றினும் பலர்க்கு விந்தையாகவும் விபரீதமாகவுமே தோற்றலாம். அதிலும் பழக்கம் வழக்கம் என்ற பேய்களினாற் கட்டுண்டு கிடக்கும் நமக்கு எப்படித் தோன்று மென்று கூறல் வேண்டா. எனினும் திருந்த வேண்டியது என்பது எல்லார்க்கும் ஒப்ப முடிந்ததோர் கொள்கையாதலின் இச் சொற்களைப் பாடபுத்தகங்களில் பயன் படுத்தி விட்டால் எளிதில் பிற்காலச் சிறூர்களேனும் பயின்று பயன்படுத்துவார்கள். காலப் போக்கில் "ஐயா, துடிவிடுப்பரே, எனது சமையாமனைவி குழவி யீன்ற செய்தியைத் துடியில் விடுங்கள்" (Mr. Telegraphist, please telegraph immediately this message of my unmatured wife having delivered of a child) என்று வழங்குவதை இயல்பிற் கேட்கலாம்.

இனி, துடியைவிட நொடியென்பது குறுகியகால அளவுடைய தாகக் கருதப்படுவதால்

*Minute* ... துடி நேரம், துடி
*Second* ... நொடிநேரம், நொடி

என்று நேர் பொருள் கோடல் சிறந்ததாம்.

Opisometer என்பது Opiso, metron என்ற இரு சொற்களின் அடியாப் பிறந்ததாம். Opiso என்றால் பிற்புறமாக என்றும் Metron என்றால் அளவு என்றும் பொருள். எனவே பிற்புறம் அளக்குங் கருவியென்பது பொருளோ எனில், இல்லை. அக்கருவி தேசப்படங்களில் (Maps) காணப்படும் வளைந்த கோடுகளை யளக்குங் கருவியாகும்.

*Opisometer* ... நெளியளப்பன்
*Spherometer* ... வளைவளப்பன்
*Pulley* ... கப்பி
Pulley rope ... கப்பிக்கயிறு
Pully block ... கப்பிக்கூடு
Sheave of pulley ... கப்பியுருளை

(தொடரும்) —காழி. சிவ. கண்ணுசாமி

---

# பதிற்றுப் பத்து விளக்கம்

(பண்டிதர் A. நடராஜபிள்ளையவர்கள்)

## (2) மறம் வீங்கு பல்புகழ்

### (கஉ) பாட்டு

வயவர் வீழ வாளரின் மயக்கி
யிடங்கவர் கடும்பி னரசுதலை பனிப்பக்
கடம்புமுத றடிந்த கடுஞ்சின வேந்தே!
தாரணி யெருத்தின் வாரல் வள்ளுகி
ரரிமான் வழங்குஞ் சாரற் பிறமான்
றோடுகொ ளினநிரை நெஞ்சதிர்ந் தாங்கு
முரசுமுழங்கு நெடுநக ராசுதுயி லீயாது
மாதிரம் பனிக்கு மறம்வீங்கு பல்புகழ்
கேட்டற் கினிதுநின் செல்வங் கேட்டொறுங்

காண்டல் விருப்பொடு கமழுங் குளவி
வாடாப் பைம்மயி ரிளைய வாடுநடை
யண்ணன் மழகளி றரிஞிமி றோப்பும்
கன்றுபுணர் பிடிய குன்றுபல நீந்தி
வந்தவ ணிறுத்த விரும்பே ரொக்கற்
றொல்பசி யுழந்த பழங்கண் வீழ
வெஃகுபோழ்ந் தறுத்த வானிணக் கொழுங்குறை
மையூன் பெய்த வெண்ணெல்வெண் சோறு
நனையமை கள்ளின் றேறலொடு மாந்தி
நீர்ப்படு பருந்தி னிருஞ்சிற கன்ன
நிலந்தின் சிதாஅர் களைந்த பின்றை
நூலாக் கலிங்கம் வாலரைக் கொளீஇ
வணரிருங் கதுப்பின் வாங்கமை மென்றோள்
வசையின் மகளிர் வயங்கிழை யணிய
வமர்புமெய் யார்த்த சுற்றமொடு
நுகர்தற் கினிதுநின் பெருங்கலி மகிழ்வே.

## கொண்டு கூட்டு

[1 வயவர் வீழ வாளரின் மயக்கி
யிடங்கவர் கடும்பி னரசுதலை பனிப்பக்
கடம்புமுத றடிந்த கடுஞ்சின வேந்தே! 3]
[9 நின்செல்வம் 9] [4 தாரணி யெருத்தின் வாரல்
வள்ளுகி ரரிமான் வழங்குஞ் சாரற்
பிறமான் றோடுகொ ளினநிரை நெஞ்சதிர்ந்
தாங்கு முரசுமுழங்கு நெடுநக ரரசுதுயி
லீயாது மாதிரம் பனிக்கு மறம் வீங்கு
பல்புக (ழாலே) கேட்டற் கினிது 9]
[9 கேட்டொறுங் காண்டல் விருப்பொடு கமழுங்
குளவி வாடாப் பைம்மயி ரிளைய
வாடுநடை யண்ணன் மழகளி றரிஞிமி
றோப்பும் கன்றுபுணர் பிடிய குன்றுபல
நீந்தி வந்தவ ணிறுத்த விரும்பே
ரொக்கற் றொல்பசி யுழந்த பழங்கண்
வீழ வெஃகுபோழ்ந் தறுத்த வானிணக்

கொழுங்குறை மையூன் பெய்த வெண்ணெல்வெண்
சோறு நனையமை கள்ளின் றேறலொடு
மாந்தி 18] [22 வணரிருங் கதுப்பின் வாங்கமை
மென்றோள் வசையின் மகளிர் 23] [19 நீர்ப்படு
பருந்தி னிருஞ்சிற கன்ன நிலந்தின்
சிதாஅர் களைந்த பின்றை நூலாக்
கலிங்கம் வாலரைக் கொளீஇ 21] [23 வயங்கிழை
யணிய வமர்புமெய் யார்த்த சுற்றமொடு 24]
[25 (b) நின்பெருங்கலி மகிழ்வே (a) நுகர்தற்கினிது 25].

## பதவுரை

வயவர் - எதிரிகளின் படையணியிலுள்ள வீரர்கள், வீழ - விழும்படி, வாள் - வாளாயுதமாகிய, அரில் - பகையினாலே, மயக்கி - அவர்களுடைய அறிவை மயங்கச் செய்து, இடம் - தலைகளாகிய இடங்களை, கவர் - மூடிக்கொண்டிருக்கும்படியான, கடும்பின் - சும்மாடு போன்ற முடிகளையுடைய, அரசு - பகையரசர்களின், தலை பனிப்ப - தலைகள் நடுக்கங் கொள்ளும்படி, கடம்பு முதல் தடிந்த - எதிரிகளுடைய காவன் மரமாகிய கடம்பினையடியோடு வெட்டி யெறிந்த, கடும் - கொடிய, சினம் - கோபத்தோடு கூடிய வேந்தே - அரசனே, நின் செல்வம் - உன்னுடைய அரசச் செல்வமானது, தார் - பூமாலை போன்ற மயிர்த்தொகுதியினை, அணி - கொண்ட, எருத்தின் - பிடரியினையும், வாரல் - பிற விலங்குகளின் உயிர்களைக் கொள்ளை கொள்ளும்படியான, வள்உகிர் - கூர்மையான நகங்களையுமுடைய, அரிமான் - சிங்கங்கள், வழங்கு - சஞ்சரிக்கும்படியான, சாரல் - மலைப்பக்கங்களில், பிறமான் - சிங்கங்களல்லாத மற்றைய விலங்குகளில், தோடு கொள் - திரண்ட இனம் நிரை - கூட்டமாகிய மந்தைகள், நெஞ்சு அதிர்ந்தாங்கு - மனந்திடுக்கிட்டுக் கலங்குவது போல, முரசு - முரச வாத்தியங்கள், முழங்கு - ஒலிக்கும் படியான, நெடு நகர் - பகைவர்களுடைய பெரிய நகரங்களில் வாழும், அரசு-பகையரசர்கள், துயிலீயாது - இரவும் பகலும் உறங்கா திருத்தலினாலே, மாதிரம் - திக்குகளிலுள்ளவர்களெல்லாம், பனிக்கும்-நடுங்குதற்குக் காரணமான, மறம் - வீரங்காரணமாக, வீங்கு - மற்றைப்புகழினும் மேம்பட்டுத்

தோன்றும், பல்புகழ் - பலவாகிய புகழ்களாலே, கேட்டற்கு - கேள்விப் படுதற்கு, இனிது - இன்பமாக விருக்கின்றது, கேட்டொறும் - உனது செல்வத்தை அவ்விதம் கேள்விப்பட கேள்விப் பட, காண்டல் விருப்பொடு - உன்னைக் கண்டு மகிழவேண்டுமென்ற விருப்பத்தினாலே, கமழும் - மதநீரின் நாற்றத்தினை விரும்பிச் சூழ்ந்து மொய்க்கும்படியான, குளவி - வண்டுகளையும், வாடா - வணங்குதல் இல்லாத, பை மயிர் - இளமையான மயிர்களையும், இளைய - இளமைத் தன்மையினு லேற்பட்ட, ஆடுநடை - உல்லாசமாக அசைந்தாடிச் செல்லும்படியான நடையினையுமுடைய, அண்ணல் - பெரிய, மழகளிறு - இளமையான ஆண் யானைகள், அரிஞிமிறு - இளங்கன்றுகளின்மீது சூழ்ந்து மொய்க்கும்படியான வரிகளையுடைய வண்டுகளை, ஓப்பும் - தமது துதிக்கைகளால் விரட்டும்படியான, கன்றுபுணர் - குட்டிகளோடு கூடிய, பிடிய - பெண் யானைகளோடு வசிக்கும்படியான, குன்று பல - பல குன்றுகளை, நீந்தி - முயற்சியோடு கடந்து, வந்து அவண் இறுத்த - உன்னிடத்தில் சேர்ந்து தங்கிய, இரும்பேர் ஒக்கல் - கணக்கிலடங்காத சுற்றத்தார், தொல் - முன்பு, பசி - பசிப்பிணியினுலே, உழந்த - பட்ட, பழங்கண் - துன்பம், வீழ - கெடும்படி, எஃகு - கத்தியினுலே, போழ்ந்து - பிளந்து, அறுத்த - துண்டாக்கப்பட்ட, வால் - வெண்மையாகிய, நிணம் - கொழுப்போடு கூடிய, கொழுங்குறை - நல்ல துண்டங்களாகிய, மைஊன் - ஆட்டு மாமிசம், பெய்த - சேர்த்துச் சமைக்கப்பட்ட, வெண் நெல் - வெள்ளிய நெல்லரிசியாலாகிய, வெண்சோறு - வெண்மையான சோற்றை, நனை - மொட்டுக்களாகிய பானைகளிலிருந்து, அமை - உண்டாக்கப்பட்ட, கள்ளின் தேறலொடு - தெளிந்த கள்ளுடனே, மாந்தி - சாப்பிட்டுத் தம்முடைய, வணர் இரும் கதுப்பின் - நெளிந்து தொங்கும்படியான நீண்ட கூந்தலினையும், வாங்கு - வேரில் வளைந்து முளைத்தெழுந்த, அமை - மூங்கிலினையொத்த, மென்தோள் - மெல்லிய தோள்களையுமுடைய, வசையில் - குற்றமில்லாத, மகளிர் - பெண்கள், நீர்ப்படு-நீரில் மூழ்கியெழுந்த, பருந்தின் - பருந்து என்னும் பறவையினுடைய, இரும் சிறகு அன்ன - பெரிய நனைந்த சிறகுகளைப்போன்ற, நிலம் தின் - கரையான் சாப்பிட்ட, சிதார் - கந்தைத் துணிகளை, களைந்த - தமது இடுப்புகளினின்றும் நீக்கிய, பின்றை - பின்பு, நூலாக்கலிங்கம் - பட்டுப்

புடவைகளை, வால் அரை - தமது இளமையான இடுப்புகளிலே, கொளீஇ - கட்டிக்கொண்டு, வயங்கு - பிரகாசிக்கின்ற, இழை - ஆபரணங்களை, அணிய - உடற்களில் அணிந்து கொள்ளும்படி, அமர்பு - தங்கியிருக்க, மெய் ஆர்த்த - உன் உடம்பைக் காப்பாற்றிய, சுற்றமொடு - படைத் துணைவர்களோடு அமர்ந்த, நின் - உன்னுடைய, பெரும்கலி - மிகுந்த ஆரவாரத்தோடு கூடிய, மகிழ்வு - திருவோலக்க மகிழ்ச்சி, நகர்தற்கு - கண்டு அனுபவித்தற்கு, இனிது - இன்பமாக விருக்கின்றது.

(தொடரும்.)

---

# காழிக் கண்ணுடைய வள்ளலார்

(சீகாழி ஸ்ரீமான் ப. அ. முத்துத்தாண்டவராயபிள்ளை அவர்கள்)

(முன் ௬௫௪-ம் பக்கத் தொடர்ச்சி)

திருஞானசம்பந்தமூர்த்திநாயனர் பிருகந்நாயகி திருவருளால் திருப்பாற்போனகம் என்னும் திருமெய்ஞ்ஞானத்தை (இந்தப் பாலமுது நைவேத்தியப் பிரபாவத்தை நம்பியாண்டார் நம்பிகளது பிரபந்தங்களாலும் காழிக் கல்வெட்டுக்களாலும் அறிந்துகொண்டு, இஃது எவ்வாறு சமைக்கப்பட்டுப் பொற்கிண்ணத்தில் எம்முத்தமிழாசிரியர்க்கு அர்ப்பணஞ் செய்யப் படுவது என்பதைப் பிரமபுரீசுராலயத்தும், காழி வள்ளலார் மடத்திலும் நடைபெறும் சம்பந்தாது நைமித்திகத்திருநாட்களில் நேரிற்கண்டு உண்டு உணர்க.) உண்டருளித் 'தோடுடைய' திருப்பதிகத்தைப் பாடிய காலத்து அத்திருமறையின் ஸப்தஸ்வரூபமே கண்ணுடைய வள்ளலாக அமைந்து நெடுநாளைக்குப்பிறகு மங்கையர்க்கரசியென்னும் மாதுசிரோன்மணியின்மாட்டு உதித்த இளங்குருந்தின்பால் ஆவேசித்துக் கண்ணுடைய வள்ளற் பெருமானகத் தோன்றுந்துணையாயிற்று என்னும் வாய்மையை ஞானநுபவ வாயிலாகக்கண்டு தெளிதல் ஆன்றோர் கடமை.

அதியரைய மங்கலத்து வேளிர் பரம்பரையினர் கண்ணுடையார் என்பதற்குப் பிரமாணம் மாயாப் பிரலாபச் சிறப்புப் பாயி

ரத்தில் காணப்படும் "கெடிலப்புனல்சூழ் அதிகைக் கதிபர்" என்ற பகுதியே. இனி கூஉ, குகமடங்களுக்குச் சாசனம் ஆக மேற் காட்டிய விசுவநாத நாயக்கர் காலத்துக் கல் வெட்டும் இதாதாமிர சாசனமும், பிறிதும் வருமாறு. இவை மேல் மதுரை சப்கோர்ட்டு 1908 ஞ அசல் 65-ம் நம்பர் வியாச்சியத்தில் ஆதாரவுகளாகத் தாக்கல் செய்யப்பட்டு அந்தக் கோர்ட்டாரால் உண்மையானவை யென அங்கீகாரமானவை.

### க. சிலாசாசனம்

ஸ்ரீமதுரை மீனுக்ஷி சுந்தரேஸ்பருள் சன்னதியில் சுவாமி சன்னதியில் சுந்தா பாண்டியன் கோபுரத்தில் தென்புரத்தில் நிலைக் கல்லுக்கு அருகால் யெளுதியிருக்கப்பட்ட சிலா சாதினம் யென்ன வென்றால் சாமி சன்னிதியில் புதுமண்டபத்துக்கு சேர்க்கை ஷெ மண்டபத்துக்கு தென்புரம் சீர்காழி திருஞான சம்மந்த கண்ணுடைய வள்ளல் பண்டார சன்னதி
மகாருச மானியருச ஸ்ரீவிஸ்வநாத நாயக்கரவர்கள் கட்டிக் கொடுத்த மட . . . .

### உ. பாரிக்கத்து

சகார்த்தம் 1464க்கு மேல் செல்லாநின்ற கீலக ஞ தைமீ ᏅᏧக உயில் சன்னதிக்குமடம் திருமஞ்சன அக்குா காரத்துக்கு தெக்கு ராசாக்களவ வரவு சத்திஞான பண்டாரத்துக் கும் கிழக்கு ஞானப்பிரகாச பண்டாரத்துக்கு மேற்கு இந்த நாங் கெல்லையில் மடம் தான சாதனமும் செய்து கொடுத்து நிதம் நாளி அரிசிசாதமும் நஞ்சை புஞ்சை விட்டுக்குடுத்து சாமிசன் னதி தென்புறத்தில் சிலாசாதனமும் அடித்து இருக்கிறது ஷெ பண்டார, சன்னதி கல்லுமடமும் தொண்ணுத்தி ஆறு செங்கல் மடமும் தலங்கள் தோறும் இருக்கிறது ஷெ வள்ளல் பண்டார த்திலிருந்து வடக்கேயு மிருக்குது இப்படிக்கிருக் கையில் யெங்கள் பெரியோர்கள் முன் ஷெ பண்டாரசன்னதி அவர்கள் உத்த இப்போது நாங்களும் குடியிருக்கிறோம் இது எனக்குத்தெரியும் ஷெ மடத்திலும் ஷெ பண்டார சன்னதி யும் அவர்கள் பேரும் சாதனமும் அடத்து இ

## ௩. உம்பிளிக்கை

குரோதி வூ, ஆடி. மீ கூஉ. சிகாழி வள்ளல் பண்டாரசன்னி தானத்துக்கு நல்லசிவன் உடபிடிக்கைச் சீட்டெழுதிக் கொடுத்த படி. உடபிடிக்கைச் சீட்டாவது மதுரையில் சுவாமி சன்னதியில் தங்கள் மடம் பூறுவமாயிருக்கிறதில் நான் வீடுங்கட்டிக் குடியிருக் கிற படியினாலே பண்டார சன்னதி யெழுந்தருளி மடத்தை விட்டு விடச்சொல்லி கட்டளையிட்டால் ஆறு மாதத்தையில் நான் வேறே வீடு கட்டிக் கொண்டு தங்கள் மடத்தை விட்டு விடுவேனாகவும் இந்தப்படிக்கு வள்ளல் பண்டார சன்னிதானத்துக்கு நல்ல சிவன் உடபிடிக்கைச் சீட்டெழுதிக் கொடுத்தேன். இதுக்கு சாக்ஷி விக்கிரம பாண்டிய பட்டர் சுந்தரபாண்டிய ஓதுவார் இவர்க ளறியச் சுகஷ்தலிகிதம்.

## ௪. உடன்படிக்கை

ட்டாதி மீ ஙஎ உ சிகாளிச்சுவாமி திருஞான சம்பந்தக் கன்றுடைய வள்ளல் பண்டாரச் சன்னிதானத்துக்கு க்கும் வயித்திலிங்க பண்டாரம் குமாரன் நெல்லைக்குமாரு பண்டாரம் உடபிடிக்கைப் பட்டயமெழுதிக் கொடுத்தபடி உடபிடிக்கையாவது தியில் வள்ளலார் மடம் இருந்தது முனதியில் நம்முடைய பண்டார மிருந்தவரை துற்கதமாய் பிராமனாள் சிறுதுனாளிருந்து அப்பால் ள்ளைக்காரனுக்கு துலுக்கன் செலவு செய்த பாவிராகன் ௱ரும் என்று சீட்டுக்கொடுத்துக் குடியிருக்கப்போகை யில் நான்துயந்து வெள்ளைக்காரன் துலுக்கனையும் விப பலர்முன்னுக்கு துலுக்கனுக்கு சிலவுசெய்த ௱ரும் விருகன் சீட்டு வாங்கி பாவிருகன் உஎ ஆக தீத்துக்கொடுத்து உள்ளூர் வள்ள பண்டார முன்னிலைக்கி பேசி தள்ளி வீசு ருமனாள் துயந்து அசாது நபாபு சாயபு வலுவில் காகிதம் வழுவில் போட்டு அதுவும் தள்ளிவைச்சி சுவாமி சன்னதி கோபுரத்தில் சில சாதினம் ஒப்பு விச்சி ள்வகைபருவந்து துயர்ந்து அதுவும் அவருக்கு வலுச்செய்து அதுக்கு கோபுரமேரி ரெத்தபானம் செய்து விலக் கினதில் வெகுபிரயாசம் செய்விச்சி மடத்தில் வீடுகட்டி குடித் தனம் பார்த்து ஒக்கிட்டு மடத்தையும் பறிபாலனம் செய்து ஷெ கிராமம் நான் விசாரித்து திருப்பரங்குன்றம் மடமும் மனுஷாள் வைத்துப் பார்த்து கொண்டு புத்திர பாரம்பரை ..ள்

வியினாலே இசகு பிசகு நடப்பி விச்சால் சிலவு செய்தப்பணம் குடுத்து விடச் சொல்வாராகவும் இதுக்கு சாட்சி விக்கிரம பாண்டிய பட்டர் குலசேகரப்பட்டர் முதலிமார் வான பண்டாரம் கர்பூர சொக்குபிள்ளை சின்னயப்பிள்ளை சேவகப்பெரு மாள் பிள்ளை பரமேஸ்வர ஓதுவார் இந்த மடத்தில் செலவு செய்தப் பணம் பண்டாரம் ரலமும் வம்முச பாரம்பரையாயிருப்போ மாகவும் மடம் விட்டுப்போகச் சொன்னால் சிலவுபணம் கேள் போமாகவும் பண்டார சன்னதி உச்சமங்காரர் மடத்திலிருக்க வேண்டியது சன்னதி வள்ளலார் மடத்தில் நான் குடியிருப்பதால் முன் ஆதியில் வெகு பிரயாசமாய் மடம் திருப்பினதால் • பரையாயிருந்து கொண்டு மடம் பொக்கு பார்த்து ஒக்கிட்டுக் கொண்டு என்றென்றைக்கும் குடித்தனம் செய்து வமிசபாரம் பரையிருப்பேனாகவும் திருப்பரங்குன்றம் மடமும் பொக்குப் பார்த்து செய்விச்சி மனுஷாள் வைத்து மடம் பார்த்துக் கொள் வேனாகவும் மடத்துக் கிராமங்கள் பார்த்து வருவேனாகவும் இந்தப் படிக்கி நெல்லைக்குமாரு.

வள்ளலார் ஸ்தாபித்த குக மடங்கள் இன்னவையென அறியக்கூடவில்லை. இம்மடங்களைப்பற்றி எழுதிய சிவாலய முனி புராணம் எனக்குக் கிடைக்கவில்லை. சிதலமான பனை ஓலைகளில் காணப்பட்டமடங்கள், பாண்டி, கச, மலைநாடு, க, கொங்கு, எ, நடு நாடு, உஉ, தொண்டைநாடு, ஙஉ, சோழநாடு காவிரி வடகரையில் கோயில் முதல் காழிவரைக்கும், கச, தென்கரையில் வாட்போக்கி முதல், சு, ஆக, கூசு, சிவஸ்தலங்களில் இருந்தனவே. இம்மடங் களிற் சில பிற்பட்டகாலத்தில் நிலைமாறி வேறு இடங்களில் அமைக்கப்பட்டன. அத்தலங்கள் அனுக்காவூர், மயிலாங்கபுரம், பழனி, பாலைக்காடு, வடகரை, கோயம்புத்தூர், கருவூர், பனங்கரை, அரவக்குறிச்சி, திருவனந்தபுரம், சுசீந்திரம், வீராணமங்கலம், பதும நாதபுரம், வடிவீசுவரம், கோட்டாறு, கன்னியாகுமரி, வள்ளியூர், நாகர் கோயில், திருப்பரிசாரம், வீரவநல்லூர், களாக்குளம், பிரம தேசம், துப்பாக்குடி, திருப்புடைமருதூர், தென்காசி, செங் கோட்டை, திருமலைராயன் பட்டினம், நாச்சியார் கோயில் முதலி யன. இம்மடங்களையும் சோழநாட்டு இதரஸ்தலங்களையும் கலாபதி வள்ளல்கள் அறுபத்து நால்வரும் தங்காலத்துக் கண்காணித்து வந்தனர்

திருவாவடு துறையினின்று கிடைத்த எழுத்துப் பிரதியொன்றில், திருஞானசம்பந்தர் தோடுடைய பதிகம் பாடியபின் அதனை அவர் பக்கலி லிருந்த கண்ணுடைய வள்ளலார் இசையோடு பாடினரென்றும், நம்பியாண்டார் நம்பி திருமுறை கண்டபின் விறலியார் இசையோடு பாடிய காலத்தில் அதனைச் செவி ஏற்று மகிழ்ந்தவர் இக்கண்ணுடைய வள்ளலார் மரபினர் என்றும் அம்மரபின் உபதேசம் பெற்ற அபிஷக்தர் அக்கால முதல் சிவாலயங்களில் ஓதுவார்களாக நியமிக்கப்பட்டு வந்தனர் என்றும் வரைவு உளது. சில வேதியரும் ஆதிசைவரும் கண்ணுடைய சந்தானத்தை ஆசரித்தும், வேளாளரும் செங்குந்தரும் சேனைத்தலைவரும் பிறரும் இவர் மகளிரும் வள்ளல் ஆதீனத்துத் தீக்கைபெற்றும், நான்கு வருணைத்துப் பெரும்பாவலரும் குருராயரையும் அவர் பின்வள்ளல்களையும் பாக்களாற்பாடியும் வந்திருக்கின்றனர். வள்ளலாதீனத்துப் பலபதிகளிலிருந்த மடபதிகளுக்குப் பலப்பல பட்டப்பெயர்கள் வழங்கிவந்தன. அவற்றை யீண்டுக் குறிப்பிற் பெருகும்.

(இனி ஐந்தாம் பகுதி தொடரும்)

---

### தமிழில் இன்றியமையாது

## வேண்டப்படும் உரைநடை நூல்கள்

(முன் சஎக-ம் பக்கத் தொடர்ச்சி)

("மதிமன்னன்" எழுதியது)

### கற்பனைகதைகள்மேல் ஓர் குறிப்பு

புதினங்கள் (Novels) புதிது, புதிதாகவும், நூற்றுக்கணக்காகவும் புற்றீசல்போலக் கிளம்புகின்றன. இவை மக்களின் ஒழுக்கத்தைக் கெடுக்கின்றனவெனப் புனிதர்கள் கதறுகின்றனரெனினும் அவற்றைத் தடுக்க முடியவில்லை. ஆனபடியால் பெயர் பெற்ற நூலாசிரியரும் சமய வுணர்ச்சிகள், தத்துவக்கருத்துக்கள் தன்னுளி ததும்பிய நல்லெண்ணங்களாதியனவற்றைக் கதைகளினூடே பொழிந்து நற்றொண்டாற்றி வருகின்றனர். சிறு பிள்ளைகளுக்குக் கசக்கும் மருந்தை வெல்லத்திற் கலந்து ஊட்டுதலே போன்று இளைஞருக்கு இனிமை பயவாப்பொருட்களாய சமயம்

தத்துவம் ஆகியவைகளைக் கதைகளில் இடையிடையே செருகும் முறை விரும்பத்தக்கதே. மேனாட்டில் Victor Hugo, Leo Tolstoy, Bernard Shaw, H. G. Wells, G. K. Chesterton, Hillaire Belloc முதலிய நூலாசிரியர்கள் இம்முறையைக் கையாடி சித்தி யெய்தி வருகின்றனர். ஆனால் தமிழ்க் கதாசிரியர்—! மேற்குறித்தோர் எழுதிய கதைகளைத் தமிழில் மொழிபெயர்த் தெழுதுகின்றனர். ஆங்கிலங் கற்ற இளைஞர்கள் அவற்றைக் கையி லெடுக்கவும் ஒருப்படார். ரேய்னல்ட்சின் கதைகளை மொழி பெயர்த்தெழுதிய திரு. வடுவூர் துரைசாமி ஐயங்கார் ஒரு கதை யின் முகவுரையில் "இது ஓர் ஆங்கில "நாவலை"!ச் சிறிதளவு தழுவி யெழுதப்பெற்றது" என்கிறார்! முழுப்பூசனிக்காயைச் சோற்றில் மறைக்க முயலல்! அன்றியும் அவர் Victor Hugo எழுதிய *Les Miserables* என்ற மிகச் சிறந்த புதினத்தைத் தமிழில் மொழிபெயர்த்து "கனகாம்புஜம்" என்று அக்கதைக் குப் பெயர் சூட்டி மூலக்கதையின் இயற்கைச் சிறப்பைக் குலைத்துச் செயற்கை வெறுமைக்கு மதிப்பளித்துள்ளார். எங்க ளது கதாசிரியர் உண்மையில் பெருஞ்சோம்பரென்கின்றேன், நாடுசுற்றி மக்களது உள்ளக்கிடையை அறிந்து, நாட்டுக்கும் நகரத்திற்கும், வீட்டிற்கும் காட்டிற்கும் உள்ள வேற்றுமைகளைக் கண்டறிந்து, தமிழ் நாட்டுக்கும், மொழிக்கும், தமிழருக்கும் ஏற்ற கதைகளை யெழுதுதற்கு இவ் "ஆசிரியர்"களுக்கு இயலாதோ? சென்னையிலும் கும்பகோணத்திலும் சோம்பிக் குந்தியிருந்து கொண்டு, திண்ணையிற் சாய்ந்தவண்ணம் ஆங்கிலக் கதைகளைப் படித்துப் பின் அவற்றைத் தமிழில்—அப்பனே! கொடுந்தமிழில்— பெயர்த் தெழுதி விளம்பரப்படுத்தி விற்றுமுதலாக்கி வயிறு வளர்க்கும் வாழ்வைக்காட்டிலும் இழிந்த நிலை வேறில்லை.

புதுக்கதை புனைந்தெழுதுவோர் ஆங்கில தமிழ்க் கல்வியுடை யோராயும், நாடு சுற்றி அவதானித்தறியும் ஆற்றலுள்ளோரா யும், சமயத்தையோ, தத்துவத்தையோ, அரசியலையோ, கைத் தொழிலையோ, குடியாட்சி முறையையோ, பழமையையோ, புது மையையோ, வாணிபத்தையோ எதனையோ ஒன்றை அல்லது பல வற்றைத் தமது கதைகளிற் புகுத்தி வாசிப்போர் உள்ளத்திற் பதியவைக்கும் முறையில் ஊானுடன் வரையுந் திறன் படைத்தோ

ராயு மிருத்தல்வேண்டும். மேனாட்டு ஆசிரியர் அத்தகையோரே. 1924-ம் ஆண்டில் டென்மார்க்கு தேயத்தவரான ஒரு கதாசிரியர் இலங்கைக்கு வந்திருந்தார். ஒரு பத்திரிகையின் நிருபர் அவரைக் கண்டு பேசியதில் அவர் இலங்கையைப் பற்றிய கதையொன் றெழுதுதற்கு இலங்கையின் பழங்குடிகளாகிய வேடர் ரேடியர் ஆதியோரைக் குறித்து அறிய வந்துள்ளாரென்பது விளங்கிற்று. H. G. Wells, Bernard Shaw முதலியோரும் அவ்வாறு தந் தாய் நாட்டையன்றிப் பிறநாடுகளுக்கும் போய் வருகின்றார். தமிழ்க்கதாசிரியருள் எத்துணை யோர் இலங்கை சென்றிருக்கின் றார்? ஈழ நாட்டுத் தமிழரைப் பற்றி அவருக் கேதுந் தெரியுமோ? அன்றியும் தமிழர் குடியேறியுள்ள மலாய் நாடு, தென் ஆப்ரிக்கா முதலிய நாடுகளில் தமிழரின் நிலைமை யென்ன வென்பதை அவரறி வாரோ? எவ்விதத் தகுதியு மின்றி நூல்வரைய முற்படும் இப் போலி ஆசிரியரின் துணிபை யென்னென்பது?

தமிழ்க்கதாசிரியர் பாரதப் பெரு நாடு முழுவதையும், அன்றி பிற நாடுகளையும் சுற்றிப் பாராவிடினும் தமிழ்நாட்டையாதல் சுற்றிவர வேண்டாமா? மேனாட்டுக் கதாசிரியர் கற்றூரால் பழிக் கப்படுகின்றாரில்லை. ஆனால் நம்மவரோ கற்றூரால் கவனிக்கப்படுவ தில்லை. என்? தமிழ்க் கதாசிரியர் அரசியல், சமயம் சமூகவியல், கல்வி, தத்துவ அறிவு முதலியவற்றில் ஒருசிறிதும் புலமை யுடைய வரல்லர். அவர்களுக்குச் சரித்திரமுந் தெரியாது. தற்கால நாட்டு உலக நடப்புகளும் வளப்பங்களும் தெரியா. எனவே கூபமண்டுகங்களாய்க் குழறுவர். ஆதலின் ஆங்கில தமிழ்க்கலை ஞர்கள் புதுக்கதைகள் புனைந்தெழுதல் வேண்டும். தமிழ் நாட்டுப் பழஞ்சரித்திரத்தைத் துருவி யாராயின் எத்துணையோ முதற்றரக்கதைகள் வரைதற்கு ஏதுக்கள் கிட்டும். ஆங்கில தமிழ்க்கலை வல்லுநரான திரு. சேதுப்பிள்ளை "கம்பர் கவி இன்பம்" "தமிழ் நாட்டு நவமணிகள்" "திருவள்ளுவர் நூல் நயம்" என்பன போன்ற சிறு நூற்றிரட்டுகளை வெளியிட் டுள்ளார். இத்தகைய நூலியற்றுவது தமிழ்ப்பண்டிதர் வேலை யாயிருக்கட்டும். ஆங்கிலங்கற்ற தமிழறிஞர் ஆங்கிலக்கல்விக்கடலை யூடுருவிப்பார்த்துப் பின் தாமடைந்த பயனைப் பிறரறியுமாறு செய் தல்வேண்டும். கவிபாரதியார் மேனாட்டுக்கலைகளைத் தமிழில் மொழி பெயர்க்க வேண்டுமென்று வற்புறுத்திப் பாடியுள்ளார். அண்மை

யில் வங்காள நாட்டைப்பற்றிக் கூறி விவரிக்கும் இரு கதைகளை வாசித்தேன். இரண்டிலும் வங்க நாட்டின் கமத்தொழிலாளர் (குடியானவர்கள்) களது எளிய இயற்கை வாழ்க்கை மணம் வீசுகின்றது. ஒன்று கங்குலி என்பவரால் வங்கமொழியில் ஆக்கப்பெற்றது. அதனை ஆங்கிலத்தில் மொழி பெயர்த்தவர், கிப்ளிங் என்ற ஆங்கிலப் புலவர் பழித்துக் கூறிய "பாபு ஆங்கிலத்தில்" (Babu English, as ridiculed by Kipling) எழுதி அக்கதையின் இனிமையைக் கெடுத்திருக்கின்றாரெனினும் முதநூலின் மேன்மை அதில் இனிது விளங்குகின்றது. வங்கநாட்டுப் பழக்கவழக்கங்களை யதிலிருந்து எளிதில் அறியலாகும். மற்றொன்று சங்கை. லால்பெகாரிடே என்ற வங்காளக் கிறித்துவ குரவரால் ஆக்கப்பெற்றது. கிழக்கு இந்திய வர்த்தகக் கூட்டத்தார் ஆட்சியில் வங்க நாட்டின் நிலைமையை அது விவரிக்கின்றது. இரண்டும் மிக்க பயன் விளைவிக்கும் கதைகள். கிறித்துவராயினும் அவ்வாக்கியோர் நடுவுநிலைமையினின்றும் பிறழாது பிறசமயங்களைப் பழியாது மதவுணர்ச்சிகள் புண்படாவாறு எழுதியுள்ளார். இத்தகைய சிறந்த கதைகளைத் தமிழில் யான் இதுகாறும் படிக்கவில்லை. வேதநாயகம் பிள்ளை எழுதிய (1) "பிரதாப முதலியார் சரித்திரம்" மாதவய்யா இயற்றிய (2) "பத்மாவதி ஒரு தமிழ்நாட்டுக் கதை" (3) கமலாம்பாள் சரித்திரம் (*ஆக்கியோன் பெயர் மறந்து போனேன்) போன்ற நல்ல கதைகள் இக்காலத்தில் எழுதப்படவில்லை. போக்கும், புகலுமற்ற புல்லர் புலவராய் நடிக்கின்றாராகையால் பயனுடைக் கதைகள் எழுதப்படவில்லை யென்பதில் யான் வியப்படையவில்லை.

குப்புசாமி முதலியார் துரைசாமி அய்யங்கார், அரங்கராசு, இராமானுசலு நாயுடு, அருணகிரிநாதன், "ஆசிரியர்" வாசன், கோதைநாயகி அம்மையார் போன்றார் யான் குறிப்பிட்ட இலக்கணங்களுக்கியையப் புதினங்கள் புனைந்தெழுதுவாரென்று நம்புதற்கிடமில்லை. எனவே புலவர்கள் என்ற பெருமைக்குத் தகுதியுடைய பேரறிஞர்கள் தமிழ்மொழியின் தவிப்பை யுணர்ந்து கற்றாரும் விரும்பு முறையில் நல்ல கதைகள் ஆக்க முற்படுவாராக. கதைகளே யன்றி ஏனை நூற்களும் உரைநடையில் எழுதப்படல் இன்றியமையாமையாகும். நாட்டின் தேவை யறிந்து தொண்டாற்றுதல் வேண்டும். நாட்டு மக்களின் நிலைமையைப் புறக்

*ஆக்கியோன் பெயர் திரு. B. இர்ாஜம் ஐயர். (ப-ர்)

கணித்துத் தம் உள்ளம் ஓடியவாறு நூலெழுதுதல் ஆக்குவோர் அவற்றை வாசிப்போர் எனும் இருதிறத்தாருக்கும் எட்டுணைப் பயனையும் பயவா தொழியும். அதியாச்சரியத்தை விளைவிப்பனவும், வீண்கிளர்ச்சியை யுண்டுபண்ணுவனவுமான (Merely Sensational and Spectacular) செய்திக ளடங்கிய கதைகள் வேண்டா. அவற்றால் அணுவளவு பலனும் விளையாது.

ஒரு மாணவன் என்ற நிலையி லிருந் தெழுதிய எனது உரைகளை அறிஞர்கள் சீர்தூக்கிப் பார்த்து யான் குறிப்பிடுஞ் சீர் திருத்தத்தை நூலியற்று முறையில் செய்தற்கு முற்படுமாறு வேண்டி யிதனை முடிக்கின்றேன். தமிழ் மொழி தழைத்தோங்குக.

---

## திருநெல்வேலி ஜில்லாவிலுள்ள சில ஆலயத் திருப்பணிகள் அரசர்கள் காலத்தை

# விளக்கும் சாசனம் 1

சாலிவாகன சகாப்தம் 945. (கி. பி 1022) கொல்லம் 199-ல்; மதுரை பாண்டிய ராசா சேகரம் உக்கிரபாண்டிய ராசா, மானூருக்கு வந்து அதற்குச் சமீபமாய் உக்கிரங்கோட்டையும் போட்டு அரசாண்டார். அக்காலத்தில் சங்கரநயினர் கோவில் ஆலயம் திருப்பணி உண்டானது. சகாப்தம் 981-ஆம் ஆண்டுக்குக் கொல்லம் 235-ம் ஆண்டில் மேற்படியார் குமாரர் விக்கிரம பாண்டிய ராசா அரசாட்சி செய்தார்.

சகாப்தம் 1017- (கி.பி. 1094) கொல்லம் 271-ல் ஷையார் குமாரர் அள்ளியுண்ட ராசா திருக்குறுங்குடி சுவாமி அழகிய நம்பி தெரிசனத்துக்கு வந்தபொழுது வேட்டைக்குப் போக மலைச்சார்பாய் வரும் வழியில் மலைக்குள் சுவாமி சுப்பிரமணியர் இருக்கிறதைக் கண்டு முன் மண்டபம் கட்டி வள்ளியூரை ஸ்தாபித்து பிரபலம் செய்தார்.

சகாப்தம் 1056, கொல்லம் 310ல்; ஷையார் குமாரர் பிராந்த ராசா அரசாண்டார்.

சகாப்தம் 1095. கொல்லம் 349-ல்; ஷையார் குமாரர் சிவிலிமார பாண்டிய ராசா வள்ளியூருக்கு வந்து சுவாமி தெரிசனம் செய்து திருப்பணியும் கட்டி பிற்பாடு சங்கரநயினர் கோவிலுக்

குப் போய் பெரியபிரகாரம் முதலிய திருப்பணி செய்தார். பிற்பாடு மானூரை பிரபலம் பண்ணிவைத்து ஓர் பெரிய குளமும் வெட்டினார். இவர் நாளையில் *கரூர் சித்தர் திருநெல்வேலி முதலிய இடங்களை சபித்தது.

சகாப்தம் 1132 கொல்லம் 386-ல்; ஷியார் குமாரர் வீர கேரள ராசா அரசாண்டார்.

கொல்லம் 424ல்; (கி.பி. 1249) தென்காசி ஆலயம் கட்டினது.

கொல்லம் 445-ல்; குலசேகரராஜா கோட்டை கட்டினது, வள்ளியூர்.

சகாப்தம் 1192 கொல்லம் 446-ல்; வீரகேரளராசர் வம்சத்திலுதித்த *குலசேகரப்பெருமாள் ராசா, அவர் தம்பி நால்வரும் வேட்டையாட திருக்குறுங்குடிக்குப்போய் ஓர் பத்திரகாளியின் உத்தரவுப்படி கோட்டையும்போட்டு சுவாமி பேருளாளப் பெருமாள் பிரதிஷ்டையும் செய்தனர்.

கொல்லம் 685-முதல் 714-வரை; *திருநெல்வேலி அரிய நாயக முதலியார் அதிகாரம்.

கொல்லம் 714-முதல் 813-வரை; *நாய்க்கமார் அதிகாரம்.

கொல்லம் 813-முதல் 850-வரை; *வடமலையப்ப பிள்ளையன் அதிகாரம்.

கொல்லம் 817ல், புதுச்சேரியான் வந்து வடமலையப்பபிள்ளையுடன் யுத்தம்பண்ணி அபஜெயமடைந்து அன்றிரவிலேயே திருச்செந்தூர் கோவிலை கொள்ளையிட்டு கப்பல் மார்க்கமாய் சுவாமியையும் தூக்கிக்கொண்டு போகையில் சுவாமி கனத்தால் கப்பல் தாங்கக்கூடாமையால் சுவாமியை சமுத்திரத்தில் போட்டுவிட்டான்.

கொல்லம் 829ல்; சுவாமியைக் கடலிலிருந்து வடமலையப்ப பிள்ளையன் எடுத்து பிரதிஷ்டையும் செய்தனர்.

கொல்லம் 831-ல்; திருமலை நாய்க்கன் பரமபதம்.

கொல்லம் 832-ல்; முத்துவீரப்ப நாய்க்கருக்கு துரைத்தனம்.

கொல்லம் 833-முதல் 855-வரை; சொக்கப்ப நாய்க்கர் துரைத்தனம்.

கொல்லம் 836-ல்; வடமலையப்பபிள்ளையனால் சொக்கநாதன் பெருங்கால் சிவலப்பேரிக்கு வெட்டினது.

கொல்லம் 680 தாதுஹு தைமீ 10௨; திருநெல்வேலி நெல்லையப்பர் ஆலயத்துக்கு பெரியமுதலியாரால் திருவுரு துலாம் 165-க்கு கிரையம் பொன் 13612.

கொல்லம் 697 தாரணஹு சித்திரைமீ ; ஷையாரால் சுவாமி 63 திருவுருக்கு பொன் 280.

கொல்லம் 730 காலயுக்திஹு தைமீ; திருநெல்வேலி பெரிய கொடி மர பிரதிஷ்டை.

கொல்லம் 780 சவுமியஹு வைகாசிமீ; திருப்பணிப் பண்டாரம் தருமம் (.........) வெள்ளோட்டம் பெரிய தேர்.

கொல்லம் 801 பிரமோதூதஹு தைமீ; அம்மன் கோவில் கோபுரம் கட்டினது.

கொல்லம் 811 விக்கிரமஹு தைமீ; சோகுளம் பிறவிப் பெருமாள் பிள்ளை தருமம் (.........) மண்டபம். (ஊசல்)

கொல்லம் 821 சார்வரிஹு சித்திரைமீ ; வடமலையப்ப பிள்ளையின் அதிகாரத்தில் ஷையாரால் சங்கிலி மண்டபம்.

கொல்லம் 823 சுபகிருதுஹு ஆவணிமீ; $7\frac{1}{2}$ முளத்தில் பொற்றேர் ஓட்டம்.

கொல்லம் 828 கிலகஹு; சிவந்தியப்ப நாய்க்கர் தருமம் சன்னதி ரிஷபக்கொடி.

கொல்லம் 811; *ஆற்றங்கரை தீர்த்தவாரி மண்டபம் பிறவி பெருமாள் பிள்ளை தருமம்.

தென்காசி நயினர் செட்டியார் தருமம், அழகப்ப முதலியார் அதிகாரத்தில் நயினர் குளம் வெட்டினது.

வடமலையப்ப பிள்ளையன் தருமம்; சுவாமி கோவில் சிவிலி மண்டபம் கிழ்புறம், தென்புறம், மேல்புறம், ஆறுமுக நயினர் கோவில் வரைக்கும் ஆறுமுக நயினர் பிரதிஷ்டையும் செய்தது.

வடபுறம் பிள்ளையன் மச்சினன் கிழவளவு திருமலைக் கொழுந்து பிள்ளையன் ,தருமம் $\frac{3}{4}$ பங்கும் $\frac{1}{4}$ பங்கு பலபேர் உபயம்.

சுவாமி கோவில் சுற்றுப் பிரகாரத்தில் தென்னம்பிள்ளைகள் மமதிசுபுகான் அதிகாரத்தில் முத்துபிள்ளை தருமம்.

நடுக்கோபுர வாசலுக்கு தெற்கு அருகாக மண்டபம் பிள்ளையன் உடப்பிறந்தாள் தருமம்.

அம்மன் சந்நதி கொடிகம்பத்திற்குத் தெற்கு மண்டபம் சுந்தரத்தோழ பிள்ளை உபயம்.

கருமாரி நாலுகால் மண்டபம் முதல் கிழக்கு வரைக்கும் தளவாய் அழகப்ப முதலியார் தருமம். நாலுகால் மண்டபத்துக்கு வடக்கு மேற்புறம் $\frac{3}{4}$ பங்கு தளவாய் அழகப்ப முதலியார் தருமம்

மேற்புறம் கால் பங்கும் வடபுறம் தெற்கு ஒரு பத்திமண்டபம் மண்டபப்படி திருமலையப்ப பிள்ளை தருமம்.

மமதிசுபிகான் அதிகாரத்தில் வெங்கிடகிருஷ்ண முதலியார் தருமம் அதாவது:—சுந்தரத்தோழப்பிள்ளை வீடுமுதல் மடைவைத்து பல்லிக்கோட்டை பண்டாரம் வீட்டுவழியாக கால்வாய் ஜலம் கருமாரிக்குவந்து தளவாய் அழகப்ப முதலியார் மண்டபப்படி வழியாக; ஆயிரக்கால் மண்டபத்துக்கு வடக்கு அருகாமையாக கொடிக் கம்பத்துக்கு கீழ்புறமாக மடை வைத்து பொற்றாமரைக்கு வந்து கல்லத்திமுடுக்குக்கு வடபுறமாக ஆனையப்ப முதலியார் வீட்டுக் கொல்லைவழியாக தெப்பக்குளத்துக்கு மடை வைத்து ஜலம் வரும்படி செய்திருக்கிறார்.

பொற்றாமரையில் வடபுறம் படித்துறைக்கு கிழக்கு மண்டபம் (ஆயம் தானப்ப முதலியார் தருமம்.)

வடபுறம் படித்துறைக்கு மேற்புற மண்டபம் வெங்கிட கிருஷ்ண முதலியார் தருமம்.

அம்மன் கோவில் பிரகாரத்தில் தென்னம்பிள் வெங்கிட கிருஷ்ண முதலியார் தருமம்.

மமதிசுபுகான் அதிகாரத்தில் திரிசிரபுரம் சிவராமகாசியா பிள்ளை தருமம் நெல்லையம்பலம் வடிவம்பலம் தெருமால்.

---

இச்சாசனம் தச்சநல்லூர் சுவாமி வேதமூர்த்தி மடாலயத்திலிருந்து கு. நல்லபெருமாள் பிள்ளையவர்களால் நகல் செய்யப்பட்டிருந்ததிலிருந்து எழுதப்பட்டதாகும்.

*ஸ்டார் மார்க் அடையாளப் பகுதிகளைப் பின்னர் விரிப்பாம்.

(......) பிராக்கட்டுகள் கிழி வற்ற பாசங்களைக் காட்டும்.

# *கருவூர்ச் சித்தர்

சிவிலிமாற பாண்டியன் நாளையில், கரூர்ச் சித்தர் திருப்புடை மருதூர் முதலிய இடங்களைச் சபித்துவிட்டு, பின் திருநெல்வே லிக்கு வந்து சுவாமியை நெல்லையப்பா வென்று கூப்பிடச், சுவாமி கேளாததினால், ஈசன் இல்லையோ வென்று, 'ஈசன் அங்கு, எருக்கு இங்கு' என்று சொல்லிவிட்டுப் புறப்பட்டு மானூருக்கு வரும்பொழுது, நெல்லையப்பர் இச்சிறந்த சிவபக்தனுடைய வலிமைக்கு மெச்சி, அடிக்கு ஆயிரம் பொன் வைத்து, ஆவணி மூலத்தில் கண்டார். பின் இவர், 'செங்நெல் அங்கு, எருக்கல் இங்கு' என மறு சாபம் கொடுத்துவிட்டு, மானூரிலேயே தங்கி அன்று ஓர் பிராமணர் இல்லம் புகுந்து பசிக்குச் சாதம் கேட்க, அப்பிராமணி "என்காணும் சப்தம் போடுகிறீர், என் கணவர் வயிற்று வலியால் கஷ்டப்படுகிறார், சாதம் கிடையாது, மற்றோர் கிரகம் செல்லு"மென, இவர் "ஓ பிராமணியே! உன் கணவர் வயிற்றுவலி அகன்றிடில் என் விருப்பின்படி சாதம் போடு வையோ" வென்று கேட்க; அம்மாது ஆமோதிக்க வயிற்று வலி யும் அகன்றது. அம்மாது இவர் விருப்பின்படி ஆடுகோழி முதலி யவைகளின் மாமிசத்தால் கறிசெய்துகொண் டிருக்கையில், பக் கத்துவீட்டுப் பிராமணர்கள் அறிந்து அரசனிடம் தெரியப்படுத்தி அவள் கிருகத்தைப் பரிசோதிக்கையில் ஒன்று மில்லாது இருந் தது. உடனே சித்தர் கோபங்கொண்டு "அகடுமுகடு கூடினாலும், அக்கிராகாரம் அடுத்தவீடு கூடாமற்போக" வென்றும்; "முக்கால் விளைந்தாலும் மோருக்கு விதியற்றுப்போக" வென்றும் சபித்து விட்டுத் திருச்செந்தூருக்குச் சுவாமிதரிசனம் செய்யச் செல்கை யில், சுப்பிரமணியர் தன் ஆலய முதலியவற்றையும் சபிப்பார் என்று எண்ணி வழியெல்லாம் சிவலிங்கங்களை உண்டு பண்ணி இவர் நடந்துவரவொட்டாமற் செய்தார். பின் இவர் தலையால் உருண்டுகொண்டு தலையூன்றி மடம் வரைக்கும் வந்தார். அங்கே சுப்பிரமணியர் பிரசன்னமாகி, "அப்பா நீ வந்து தரிசனம் பண் ணிக்கொண்டு யாதொன்றையும் சபியாமல் உடனே மோட்சத் துக்கு வழிதேடிக்கொண்டால் இச்சங்கடத்தை நிவர்த்திக்கிறேன்" என்றார். அங்ஙனமே இவர் ஒப்புக்கொள்ள, சுப்பிரமணியர் ஊரைச்சுற்றிச் சிவலிங்கம் இல்லாமல் இருக்கச்செய்து சுருக்க

மாய்ப்போக வழிகாட்டினர். இவர் அங்ஙனமே போய்ச் சிவதரிச னம் செய்து கொல்லம் 386-ல் காந்தீஸ்வரத்தில் ஒளியோடே ஐக்கியமானுர்.

## அரிய நாயக முதலியார்

இவர் பிறந்தது தொண்டை மண்டலம். ஜாதி தொண்டை மண்டலத்து முதலிமார் வம்சம். இவர் தகப்பனுர் காலத்தில் குறு மன்னர்களாகிய 24 பேர் இராச்சிய பரிபாலனம் செய்துகொண் டிருக்கையில் மறுமன்னியன் ஆதண்ட சக்ரவர்த்தி வந்து குறு மன்னரோடு யுத்தம்பண்ணி ஜயித்து தொண்டை மண்டலத்து முதலிமார் வம்சத்தில் பெண்கேட்க, அவர்கள் மறுக்க, பலாத்கார மாய்ப் பெண்ணேச் சிறை கடத்திக்கொண்டு போகையில் முதலிமார் அரசனேடு யுத்தம் பண்ணி ஜயித்துப் பெண்ணேத் திருப்பிக்கொண் டார்கள். இதனுல் முதலிமார் பக்கத்தில் சனங்கள் அதிகமாய் மடிய சிலர் தொண்டை மண்டலத்திலிருந்து, எடுபட்டுப்போய் விட்டார்கள். அதில் இவர் தகப்பனுரும் எடுபட்டுப்போய்த் திரிசிர புரத்தில் குடியேறிய அரிய நாயக முதலியாருக்கு 5-வயதில் காலம் சென்றனர். அவர் அடியான் ஓர் பள்ளன், அரிய நாயக முதலியாரையும் அவர் தாயாரையும் சம்ரட்சித்துக்கொண்டு வரு கையில் ஒருநாள் பள்ளன் கோபங்கொண்டு ஏர்க்கம்பால் ஓர் அடி இவரை அடிக்க; இவர் விசனப்பட்டு மற்ருேர் ஊர்சென்று ஓர் சிவாலயத்தில் களேப்போடு படுத்திருக்க; அந்த ஆலயத்தின் ஸ்தானிகர் இவரைக் கண்டு, தன் சொந்தப் பிள்ளேயைப்போல் 10-வயதுவரை வளர்த்து வருகையில் சிலகாலம்சென்று வேலூர்க் குப் போய் ஆனேக்குந்தி பட்டணத்தில் கொட்டியம், நாகமநாயக் கனிடம் சேர்ந்து இராயர் சமஸ்தானத்தில் கொட்டியக் கணக்குத் பார்த்து வருகையில், அந்த இராயர் சமஸ்தானத்துக் காளிகோவி வில் கொடை வந்தது. அந்தக் கொடைக்கு வளேந்த கொம்பை யுடையநரை எருமைமாட்டை பலிபோடுவது வழக்கமாதலால் அவ் வழக்கப்படி அம்மாட்டை ஒரே வெட்டில் வெட்டவேணும் என் றும் அப்படி வெட்டினவர்களுக்குத் திரிசிரபுரம் சீமை அதிகாரம் கொடுக்கிருேம் என்றும் இராயர் விளம்பரம் செய்தார். அதில் அரியநாயக முதலியார் தான் வெட்டுவதாய்ச் சொல்லி அன்றிராத்-

திரி ஓர் சுருள் கத்தியால் பிருவாய் ஒரே வீச்சில் வெட்டினார். இராயர் சந்தோஷப்பட்டுத் திரிசிரபுரம் அதிகாரமும் கொடுத்து வெகுமானமும் கொடுத்தார்.

'திருநாவுக்கரசு'

---

ஔவையாரின்

# வரையறை மொழிகள்

## II

## காப்பது விரதம்

## நோன்பென் பதுவே கொன்று தின்னாமை

(திரு. சேலை. சகாதேவ முதலியார்)

விரதம் அல்லது நோன்பு எனப்படுவ தியா தெனின், உயிர்களைத் துன்புறுத்தாமற் காப்பதும் அவைகளைக் கொன்று அவ்வூன் தின்னாமையுமேயாம், என வரையறுத்து வைத்தார் ஔவைப்பிராட்டியார். 'அவி சொரிந்து ஆயிரம் வேட்டலின் ஒன்றன் உயிர் செகுத்து உண்ணாமை நன்று' என இதனையே வற்புறுத்தி வைத்தார் வள்ளுவனாரும். அப் பெருநாவலர் தமது முப்பாற்கண் புலான்மறுத்தலையும், கொல்லாமையையும் துறவறத்தானுக்கென்று ஓதி வைத்துள்ளா ராலோ வெனின், அற்றன்று; அதன்கண் அவ்வப் பாலிற் காணப்பட்டவை அதனதனுக்குச் சிறப்பென்றும் ஏனையவற்றிற்குப் பொதுவென்றும், இயல்களுக்கும் இஃதொக்குமென்றும் கொள்ளப்படும்.

தன்னுடல் ஓம்பி உயிர்வாழ்தற்குப் பிறிதின் ஊன் உண்டல் மேற்கொள்பவன், 'கொல்லாமை மேற்கொண்டொழுகுவான் வாழ்நாள்மேற் செல்லாது உயிருண்ணுங் கூற்று' என்னுந் தெய்வ வாக்கை உட்கொண்டு மனவுறுதி பெறுவானாக. மற்றை உயிர்களினும் மக்கள் உயிரே சிறந்த தாதலான், ஒருவன் தன்னுயிரை நிலைபெறுத்தற்குப் பிறிதின் உயிர்நீக்கி அவ்வூன் கொள்ளலாகாதோ வெனின், 'தன்னுயிர் நீப்பினுஞ் செய்யற்க தான் பிறிதின்னுயிர் நீக்கும்வினை' எனத் தமிழ்மறை முழங்குவது கண்டு

கடைப்பிடிக்க. விலைப்பாலிற் கொண்டு ஊன் மிசைதலால் வரும் ஏதம் என்னை யெனின், 'ஊன் தின்பவர்க்கு அருளாட்சி யில்லை,' யென்றும், 'உண்ணாமை யுள்ளது உயிர்நிலை' என்றும் அவ்வுயர் மறை போதுவது கண்டு புலால் மறுத்துப் புண்ணியம் பெற்று வாழ்க. கொலைக் குற்றம் கொல்வானுக்கே யன்றி ஊன் கொள் வானுக்கும் செல்லுமோ வெனின், 'தினற் பொருட்டாற் கொள்ளா துலகெனின் யாரும் விலைப் பொருட்டா லூன் தருவா ரில்' என்று அம் மெய்ம்மறையே ஐயம் விலக்குமா றறிக.

இவ்வாறு தன்னுயிர்க் கெனவே வாழாது பிற பல்வேறு உயிர்களினிடத்தும் அன்பும் அருளுங் காட்டி ஆன்றோர் தந்த நூல்வழி நின்று பிறிதின் நோய் தன்னோய் எனவே மனத்தி னூன்றக் கொண்டு அறிவினா லாய பயன்பெற்று கொல்லா நலத் ததே நோன் பென்னும் அறத்தை மேற்கொண்டு வாழ்பவனே நோன்பியற்றியவனாவான். நோன்பெனினும் தவமெனினும் விரத மெனினும் ஒக்கும். கொலையே உயிர்க் கிறுதியும் கொல்லாமையே உயிர்க் குறுதியு மாம்.

உற்றநோய்தீரத் தெய்வங்கட்குச் செய்துகொள்ளும் நேர்ச்சி காரணமாக உயிர்களைப் பலியிட்டு அவ்வூன் உண்டலும் குற்றமாமோ வெனின், அஃதே பெருங்குற்றமாம். ஆறறி வுடையன் என்று எண்ணப்பட்ட மனிதன் தன்னுட லுயிர் ஓம்பு தற்கு அறிவு குறைந்த அஃறிணை உயிர்களைப் பலியிடின் அத் தெய்வங்கள் திருப்தி யடையு மென்பது மெய்யறிவுடைய எவரா லும் ஏற்றுக் கோடற்பால தொன்றன்றாம்; அத்தகைய தெய்வங்களும் தெய்வத் தன்மை யுடையனவாக அப்பெரியோர் கொள்ளார். குறையறி வுயிர்கட் குறை தீர நிறையறி வுயிர்கள் பலிபடுவதே நேரிதா மென்க.

இனி, கிரீன்லண்டு முதலிய குளிர்தேச வாசிகட்குப் புலா லுண்ணல் இன்றியமையாத தாதலின், புலாலுண்ணாமை தெய்வ சம்மத மாகாது, அது தெய்வ சம்மதமாயின் உலகுக் கெல்லாம் பொதுவான வோர் உண்மையாக வேண்டு மன்றோ வென்பார்க்கு, நா மிருப்பது இப்பரத கண்டம் அல்லது இந்திய நாடு, இஃதோ நாடா வளந்தரு நாடு, எப் பொறை மேல்வரினும் தப்பாமல் தாங்க வல்லநாடு, உஷ்ண மண்டல நாடு, புலா லுண்ணாமையைப்

பெரும் புண்ணியமாகப் போற்று நாடு ; ஆதலான் இஃதொட்டிய மட்டும் தெய்வ சம்மத முண்மையோ இன்மையோ வென்னு மையப்பாடு நமக்கு வேண்டாம் ; புலா லுண்ணுமையே நமக்குச் சிறந்தது ; அதுவே நமதுடலுக்கு ஒத்தது ; நமது உடலோ ஈசன் கோயிலு மாதலான் புலா லுண்ணுமையே நமது தெய்வ சம்மதம்—என்னும் அறிவைப் புகட்டி அகமகிழ்வோமாக.

மேலும், புலாலுண்பவனே உடலுரத்தின் மேம்படுவன், மற்றையோன் அஃதற்றவனுவன் எனின், அஃது உலகானுபவத்தில் அவ்வாருகக் காணப்படுவ தின்று; நோயும், அகால மரணமும், வலியுண்மையு மின்மையும், இருதிறத்தவ ரிடமும் ஒப்பச் செல்வதை அறியாதா ரில்லை. யாம் கண்டவளவில் நமது நாட்டிற் புலா லுண்ணுதவரே நோயற்று, உடல் நலமுற்று குண நலமும் பெற்று வாழ்வது பெரும்பான்மையாக வுள்ளது. ஆதலான் இந்துக்களாகிய நமக்குப் புலா லுண்ணுமையே பெரும் புண்ணிய மாகும் என்னும் உண்மை முக்காலத்தும் மறுக்கப் படாத தொன்ருகும்.

உற்றநோய் நோன்றல் உயிர்க்குறுகண் செய்யாமை
அற்றே தவத்திற் குரு

நமது நாட்டில் வழக்காருக மக்களால் ஏற்றுச் செய்யப்படும் கிழமை திதி நாள் விரதங்கள், சில தெய்வங்களை நோக்கிச் செய்யும் நோன்புகள், இவையே யன்றித் திவசம் முதலிய சடங்குகள் ஆகிய இவற்றின் உட்கருத்து நோயற்ற வாழ்வையும், மனத் தூய்மையையும், அன்பு வளர்ச்சியையும் அருள் உணர்ச்சியையும் மக்கள் அடைந்து இம்மை மறுமைப் பயன்களை எய்துவதே யாகும். ஒத்த உயிர்கட்கண் அன்பும், மற்ற உயிர்கட்கண் அருளுங் காட்டிக் காத்தோம்பி, மெய்யுணர்வையும் ஞானத்தையும் பெற்று, உடலை விட்டு உயிர் நீங்கிய பிற்றை வாழ்விற் போனந்தத்தைப் பெறுவதே மக்கள் கொண்டுள்ள இப்பிறவியின் பெரும் பயனுகும்.

கொலைப்பாவ மென்பது யாதோருயிரை அதனுடலி னின்றும் நீக்குவதோடு நின்று விடவில்லை. 'மனத்துக்கண் மாசில னுதல் அனைத்தறன்' என்னும் பொய்யாமொழிப்படி ஒருவன்

மனத்தினுற் கொலை வினையை எண்ணுவதும் அதனேடொக்கும். மேலும் பிறவுயிர்களுக்கு இன்னுத வற்றினையோ, தீமை விளைவிப் பதனையோ செய்து, அதனுல் அவை மனநோ யடைவதற்குக் காரணமாதலும் கொலைப்பாவமே. இனிய செய்தார்க்கு இன்னு செய்தலும் அதுவே. இன்னும் புறங்கூறல், நடுநிலை பிறழல், பெரியோர்ப் பிழைத்தல், அடுத்துக் கெடுத்தல், வஞ்சித்தல், கொடுங்கோன்மை முதலியனவும் பிறர் மனநோய்க் கிடந்தாலால், அவையும் அவர்களைக் கொன்ருற் போன்றனவே. 'அல்லற்பட்டு ஆற்ருது அழுத கண்ணீர் அன்றே செல்வத்தைத் தேய்க்கும் படை', 'அழக் கொண்டன வெல்லாம் அழப்போம்' என்பன போன்ற ஆன்ருேர் வாக்குங்கள் இதனை வற்புறுத்திக் காட்டு வதுங் காண்க.

மேற்கூறிய வாற்ருல், எவ்வகைப்பட்ட உயிரையும் எப் பொருட்டாயினும் கோறல் செய்தலும், அப்புலாலை யாவது வேறு விலைப்பாலிற் கொண்டதனையாவது உண்ணலும், மனம் வாக்குக் காயங்களால் பிறவுயிர்கள் மனம் வருந்துதற்குக் காரணமாதலும் கொலைப்பாவமாம் என்பதும், இவற்றின் எண்ணத்தையும் அற வொழித்து அவற்றின் மீது அன்பும் அருளும் உடைமையே நோன்பாவ தென்பதும் பெறப்பட்டன.

கொல்லான் புலாலை மறுத்தானைக் கைகூப்பி
எல்லா வுயிருந் தொழும்.

---

# கம்பரும் இசைக்கலையும்

(தமிழ்ப் பண்டிதர் திரு. மா. இராசமாணிக்கம் அவர்கள்)

இசைக்கலையும் அதன் பெருமையும் இற்றெனப் பெரும் பாலர் உணர்ந்திருப்பர். இசையின் அருமையையும் பெருமை யையும் ஓர்ந்தே, தமிழர் இசைத்தமிழை முத்தமிழுள் நடுநாயக மாக வைத்துளர். தமிழ் இலக்கிய நூல்கள் இசைத்தமிழிலேயே உள்ளன. இசை, கல்மனத்தையும் கரைந்துருகச் செய்யும் பெற்றி வாய்ந்தது. கற்ருேரும் மற்ருேரும் இசையின் வயப்பட்டே

நீர்வர். அன்பைப்பெருக்கி ஆருயிரை வளர்ப்பது இசை. இசையைக் கேட்டு இன்புறா உயிர்கள் இலை என்றே கூறலாம். விலங்குகள், பறவைகள், செடிகள், பாம்பு முதலான உயிர்கள் இசையில் இன்பமடைகின்றன. பால் வேண்டி அழும் பசுங் குழவியும் இசைவயப்பட்டுப் பாலையும் பசியையும் மறந்து கண்கள் செருக ஆனந்தமடைகின்றது. இசையின் வயப்படாதார் அன்பற்றவர் என்றே கூறுதல் அமையும். இசை, வாழ்க்கையின் இன்பத்தை வளர்ப்பதாகும்.

இசையைப் பண்டைத் தமிழ் மக்கள் போற்றி வளர்த்தனர் என்பது பண்டை இலக்கியங்களால் அறியப்படும் உண்மை. அரசன் முதல் ஆண்டிவரை உள்ள மக்கள் இசையை வளர்த்து வந்தனர். சில மலர்கள், அவைமீது வண்டுகள் தங்கி இசைபாட மலரும் என்னும் உண்மையை 'முல்லை, வரிவண்டுத வாய் நெகிழ்ந்தனவே' என்ற 'குறுந்தொகை' அடிகள் நினைவூட்டுகின்றன. பாம்பைப் பிடிக்கும் பிடாரன், தான் வைத்துள்ள இசைக்கருவியால் பாடுகின்றான். அவ்வோசையைக் கேட்ட அரவம் அவன் எதிரில் தோன்றி அசைவற்று நின்று மகிழ்கின்றது. அந்நிலையில் பிடாரன் அதைப் பிடித்துக்கொள்கின்றான். இஃது அனைவரும் அறிந்த உண்மை.

கண்ணன் கதையில் இருந்து பசுக்களும் எருதுகளும் கன்றுகளும் இசைவயப் படுவன என்பது தெரிகிறது. மாலைப்போது குறுகியவுடன் பல்வேறு இடங்களில் மேயும் பசுக்களை ஒன்று சேர்க்கக் கண்ணன் தன் பொள்ளாங்குழலை எடுத்து ஊதுவன். குழலோசையைக் கேட்டதும் அவை ஒன்றுகூடிக் கண்ணனை அடைகின்றன. கண்ணன் இசையில் வல்லவன். இசை இன்பத்தில் ஈடுபட்டவன். வண்டியில் பூட்டப்பட்ட மாடுகள், ஏற்றக் கிணற்றில் வேலைசெய்யும் மாடுகள், உழுதொழில் செய்யும் மாடுகள் இனையன அவற்றோடு சம்பந்தப்பட்ட மக்கள் பாடும் 'தெம்மாங்கு' முதலிய பாட்டுக்களைக் கேட்டுக்கொண்டே தங்கள் உழைப்பையும் துன்பத்தையும் மறந்து, இன்பத்தில் ஆழ்ந்த உள்ளத்தோடு உழைக்கின்றதைக் காணாதார் யார்? நூல்களைப் படித்தறியாது நமது அனுபவவாயிலாகவே இசையின் அருமை பெருமையைக் கண்டறியலாம் அன்றோ?

நமது பண்டைத் தமிழ் இலக்கியமாகிய சீவக சிந்தாமணியின் கதாநாயகன் 'சீவகன்.' அவன், ஆண்களைப் பார்க்கலாகாதென்றிருந்த 'சுரமஞ்சரி' என்ற பெண்ணைக் கிழவேடத்துடன் சென்று, இசைபாடி வென்றான். அவன் இசையைக் கேட்டதும் பெண்கள், வேடன் பறவைபோல் கத்தும் ஓசையைக் கேட்டு மயங்கி, கூட்டமாக ஓடிவரும் மயில்களைப் போல் ஓடிவந்தனராம்.

"கள்ள மூப்பி னந்தணன் கனிந்த கீத வீதியே
வள்ளி வென்ற நுண்ணிடை மழை மலர்த் தடங்கணார்
புள்ளு வம்ம திம்மகன் புணர்த்த ஓசை மேற்புகன்
றுள்ளம் வைத்த மாமயிற் குழாத்தி னோடி யெய்தினார்.

எனக் கவி கூறுவது கருதத்தக்கது.

இறைவன் இசை வடிவானவன். இசைப் பாட்டுகளைப் பாடி இறைவனை எய்தினோர் பலர் என நூல்கள் கூறுநிற்கும். "இயலவன், இசையவன்", "பண்ணு நீ, சுவைபு நீ," எனப் பெரியார் பாடியுள்ளதைக் காண்க. இலங்கைக் காவலன் இசை பாடிச் சிவனை இன்புறச் செய்தான் என்று இராம கதையால் அறிகிறோம். பெரிய புராண நாயன்மாருள் சிலர் இசைவலியால் இறைவனை மகிழ்வித்தனர்; வைணவப் பெரியார்களான நம் பாடுவார், திருப்பாணாழ்வார் முதலியோரும் அங்ஙனமே; என நூல்கள் அறிவிக்கின்றன.

இத்தகைய பெருமை வாய்ந்த இசையைப்பற்றி நம் கம்பர் பெருமான் யாது கூறுகின்றார் என்று கவனிப்போம். நாட்டுப் படத்தில், மருத நிலத்திலும் நெய்தல் நிலத்திலும் எழுகின்ற இசைகள் ஒன்றுபடுவதை அங்குள்ள உயிர்களே யன்றி, குறிஞ்சி, முல்லை நிலங்களில் உள்ள மக்களும் மற்றைய உயிர்களும் அனுபவித்து உறங்கும் என்று கூறுங் கவி இன்பம் பயக்கின்றதைக் காண்க :—

"கொன்றை வேய்ங்குழல் கோவலர் முன்றிலில்
கன்று றக்கும் குரவை கடைசியர்
புன்ற லைப்புனங் காப்புடைப் போதாச்
சென்றி சைக்கு நுளைச்சியர் செவ்வழி."

மருத நிலத்தில் உழத்தியர்பாடும் குரவைப் பாட்டு, முல்லை நில இடையர் இசைக்கும் குழலின் இசையோடு தழுவி, அவர் முன்றிலில் கட்டியிருக்கும் கன்றுகளைத் தூங்கச்செய்யும்; நெய்தல் நிலத்து வலைச்சியர் பாடுகின்ற செவ்வழி என்ற பாட்டைத் தினைக் கொல்லையில் காவல் காக்கும் குறிஞ்சிநிலப் பெண் கேட்டு இன் றுயில் கொள்வள். அதனால், தினைப்புனக் காவல் அழிகின்றது. கதிர்களைக் கிளிகள் கொள்ளை கொள்கின்றன.

இத்தகைய விழுமிய பொருள் வாய்ந்த செய்யுளைக் கம்பர்—இசைக் கல்வியை நன்குணர்ந்த கம்பர்—தம் அரிய அநுபவத்தால் நமக்குக் கூறிவைத்தது போற்றத் தக்கதே. குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் என்ற நானிலங்களும் ஒன்றை ஒன்று அடுத் திருப்பன; மருத நிலத்தில் பாடும் இசை, முல்லை நிலத்து ஓசை யோடு ஒன்றுபடுகின்றது. மருத நிலத்தில் உழத்தியர் பாடுவர். முல்லையில் குழல் பாடுவது. இவை இரண்டும் ஒன்று பட்டன என் றால், உழத்தியர் குரலோசை குழலோசையோடு ஒன்றியது என்ப தன்றோ பொருள்? குரலிசையும் குழலிசையும் ஒன்றுபடப் பாடுதலே பண்புடைத்து என்பதனை யன்றோ கம்பர் நமக்கு உணர்த்துகின்றார்! அவ்வோசை ஒன்றுபட்டு ஒலித்த வினிமை யால் கன்றுகள் உறங்கின என்றார். கன்றுகளே உறங்குமாயின் மக்கள் இனிமையெய்தி உறங்கக் கேட்பானேன்! நெய்தல் நிலத் துப் பாடும் வலைச்சியர் குரலோசை, குறிஞ்சி நிலத் தினைப்புனத் தில் காவல் காக்கும் குறப்பெண்களை உறங்கச் செய்தது என்றார். இங்ஙனம் அன்றோ இசை அமைதல் வேண்டும்? கேவலம் வலைச் சியரும் உழத்தியரும் இவ்வாறு இசையில் வல்லவரா யிருந்தனர் எனின், அந்நாட்டு உயர்குலப் பெண்கள் எங்ஙனம் இருந்தனரோ? என்னே கம்பர் நமக்குத் தரும் இசை விருந்து!

பாடகர், இனிய மதுவையுண்டு, தமது சிறிய யாழ் இசைத் துத் 'தெள்விளி' என்னும் பண்ணைப் பாடிக்கொண்டு அதிகாலையில் வீதிவழியே செல்வார்கள். அப்பாடலே கோசலநாட்டு மகளி ரைத் துயிலினின்றும் எழுப்புவதாம். ஆடவர்க்கு முன் எழவேண் டியவர் 'பெண்டிர்' என்ற கொள்கையை மறவாக் கம்பர் 'அவ் விசைப் பெண்டிரை எழுப்பியது' என்றார். இசையைக் கூறப் போந்த கம்பர் பெண்டிர் தம் பெருநிலையையும்' வற்புறுத்திக்

கூறுதல் படிப்போர் உள்ளத்தைப் பரமானந்தம் அடையச் செய்கின்றதன்றே? அதிகாலையில் இசையைக் கேட்டு எழுவதால், தூய மனநிலை இசை இன்பத்தில் ஈடுபடுகின்றது; இறைவனை நினைத்து வழுத்த ஏதுவாகின்றது. என்னே கம்பர்காட்டும் இரு பொருள் அழகு!

"தெள்விளி சிறியாழ்ப் பாணர் தேம்பிழி நறவ மாந்தி
வள்விசி கருவி பம்ப வயின்வயின் வழங்கு பாடல்
வெள்ளிவெண் மாடத் தும்பர் வெயில்விரி பசும்பொற் பள்ளி
எள்ளருங் கருங்கட் டோகை இன்றுயில் எழூப்பு மன்றே"

எனக் கம்பர் கவின்பெறக் கழறியுள்ளார்.

மிதிலைக் காட்சிப் படலத்தைக் கூறப்போந்த கம்பர் இசையைப் பெருமைப் படுத்தும் இடம் பெற்றமைக்கு மகிழ்ந்து, தம் எண்ணத்திருந்ததைத் தெள்ளிதில் தெரிவித்து விட்டார். இசை பயில் சாலைகளும் நாடகமேடைகளும் மிதிலையில் உண்டு என்றார். நரம்புக் கருவிகளை மீட்டும் வகையும்—பாடும் வகையும்—பாடுவார் கவனிக்க வேண்டுவதையும் இற்றென இயம்பியுள்ளார்.

"வள்ளுகிர்த் தளிர்க்கை நோவ மாடகம் பற்றி வார்ந்த
கள்ளென நரம்பு வீக்கிக் கண்ணொடு மனமுங் கூட்டி,
தெள்ளிய முறுவல் தோன்ற விருந்தென மகளி ரீந்த
தெள்விளிப் பாணித் தீந்தேன் செவிமடுத் தினிது சென்றார்,"

யாழின் நரம்புகளைத் தம் கூரிய நகங்கள் வாய்ந்த தளிர் போன்ற கைகள் நோகும்படி வலித்துச் சுருதி சேர்த்து, தாம் பாடும் பாடலின் பொருளை மனத்தில் அனுபவித்து, அவ்வாறு அனுபவிப்பது அவர் கண்களில் தோன்றவும், இளநகை உண்டாயதால் பல்லொளி சிறிது விளங்கவும் மாதர் 'தெள்விளி' என்னும் இசையில் அமைந்த பாட்டாகிய தேனை இராமலக்குமணருக்கும் கோசிகனுக்கும் விருந்தாகத் தந்தார். அவர்கள் செவியார உண்டு இனிது போனார் என்று கம்பர் நமக்குத் தரும் விருந்து மருந்தினும் மாண்புடைத்தே! சுருதி சேர்த்தல்—பாடும் பாட்டின் பொருளை உள்ளவாறு உணர்தல்—உணர்ந்ததை உருக்கமாய் அனுபவித்தல், அனுபவித்தலால் உண்டாகும் இன்பம் கண்களில்

தோற்றுவித்தல்—இசை இன்பம்தோன்ற இளநகை அரும்புதல் இவை யனைத்தும் இசைபாடுவோரிடம் தோன்ற வேண்டுவன; என்று கம்பர் நமக்கு உணர்த்துகின்றார்.

இக்காலத்தே பாடுமகளிர் பலர் தாம் பாடும் பாடலையும் அதன் பொருளையும் கவனியாது 'வந்திருப்போர் எத்தனைபேர்? இவர்களில் பணக்காரர் யார், யார்? எவர் நமது வலையில் சிக்கு வார்?' என்று பலவாறு எண்ணமிட்டுப் பாடுவதை யாவரும் அறிவர். கம்பர் கூறிய இலட்சணம் இக்காலத்தில் பாடுமகளிர் பால் இருப்பது அருமையினும் அருமை என்றே சொல்வோம்.

பாடலின் அருமையைக் கூறிய கம்பர் ஆடலின் அருமை யையும் அழகுபட அறைந்துள்ளார். நடனமாதர் குரல் ஒலியும் வீணையின் ஒலியும் மத்தளத்தின் ஒலியும் ஒன்றோடு ஒன்று பொருந்தியதைக் கம்பர் 'அவை, தழுவித் தூங்கின' என்கிறார். அவ்வளவில் நம் கண்களும் தூங்குகின்றன.

“நெய்திரள் நரம்பில் தந்த மழலையி னியன்ற பாடல்
தைவரு மகர வீணை தண்ணுமை தழுவித் தூங்கக்
கைவழி நயனஞ் செல்லக் கண்வழி மனமுஞ் செல்ல
வையநுண் ணிடையா ராடும் நாடக அரங்கு கண்டார்.”

என்ற கம்பர் செய்யுள் கற்பவர் மனத்தைக் கவரத் தக்கதா யுளது. நெய் பூசிய நரம்பில் இருந்து எழுகின்ற இனிய குரலில் மழலைச் சொற்கள் அமைந்த பாடல், வருடப்படுகின்ற மகரவீணை யோடும் மத்தளத்தோடும் பொருந்திக் கலந்து தூங்கியது; அவர் அபிநயிக்கின்ற கையைத் தொடர்ந்து கண்கள் புரண்டன; அக் கண்களைப் பின்பற்றி அவர் மனமுஞ் சென்றது; இங்ஙனம் நடனமாதர் ஆடிய நாடகமேடைகளைக் கண்டு சென்றனர். மூவ ரும் 'நடனம் ஆடுகையில் பாடும் பாடல்-வீணை யொலியோடும் மத்தள ஒலியோடும் ஒன்றுபடல் வேண்டும்! கை பாட்டின் பொருளுக்குத் தக்கபடி அபிநயிக்கவேண்டும்; அக்கையைத் தொடர்ந்து கண்கள் புரளவேண்டும்; கண்கள்வழி மனமும் செல்ல வேண்டும்'. இஃதே, உண்மையான இசைக் கல்வியாளர் கவனிக்க வேண்டியது. இதனையே கம்பர் வற்புறுத்துகின்றார்.

கம்பர் கூறும் விதம் நடனஞ் செய்பவர் மிகச் சிலரே இக் காலத்துளர்.

கம்பர் இராமகாதையைக் கூறுமுகத்தான் நமக்கு அறிவிக்கும் அரிய விஷயங்கள் பல. அவற்றில் இஃதொன்றாம். இராம கதை யொன்றையே கவனியாது, நம்மையும் இடையிடையே கவனித்து நல்விஷயங்களை எடுத்துக் கூறும் கம்பர்மாட்டுத் தமிழ் உலகம் என்றும் நன்றி செலுத்தக் கட்டுப் பட்டதாகும் அன்றோ?

---

# இந்தியாவின் கலைச்சிறப்பு

(டாக்டர் எஸ். ஸி. பால்)

கிறிஸ்து பிறப்பதற்கு முன்னருள்ள காலத்தின் 5-வது நூற்றாண்டிலேயே இந்தியாவில் இரு பல்கலைக் கழகங்களிருந்தன. அக்காலத்தைய உலகத்தின் பல பாகங்களிலிருந்தும் மேற்கூறிய பல்கலைக்கழகங்கட்கு ஆயிரக்கணக்கான மாணவர்கள் சென்று கொண்டிருந்தனர். அக்காலத்தில் ஐரோப்பாவில் பல்கலைக்கழகங்களொன்றுமில்லை. கிறிஸ்து பிறந்து 6-வது நூற்றாண்டில்தான் ஐரோப்பாவில் பல்கலைக்கழங்கள் தோன்றின. ஆதிகாலத்திலேயே இந்தியாவில் கல்வி மணம் வீசவாரம்பித்தது. ஆனால், பிராமணர்கள், க்ஷத்திரியர்கள் வைசியர்கள் முதலியவர்களே கல்விகற்று வந்தனர். கல்வி கற்பதற்கும் பிறருக்குப் போதிய வசதிகள் கொடுக்கப்படவில்லை. இந்தியாவில் பொதுவாகச் சிறுவர்கட்கு 5-வயதிலிருந்து 9 வயதுவரை வீட்டிலேயே கல்வி கற்றுக்கொடுப்பதே வழக்கம். ஆதிகாலத்தில் மாணாக்கர்கள், குருமார்கள் அல்லது ஆசிரியர்கள் வீடுகட்குச் சென்று கல்விகற்பது வழக்கம். அவர்கள் தங்களுடைய குருமார்களுடனும் ஆசிரியர்களுடனும் கூடிவாழ்ந்து அவர்கட்குத் தொண்டு செய்வது வழக்கம். அக்காலத்தில் குருமார்கள் எனப்படுவோர்களையே தற்காலத்தில் போசிரியர்களென்றும், ஆசிரியர்களெனப்படுவோர்களையே விரிவுரையாளர்களென்றும் அழைக்கின்றனர். புராதன காலத்தில் உலக முழு

வதும் புகழ்பெற்றிருந்த பல்கலைக்கழகங்கள் இந்தியாவில் மூன்றிருந்தன. டாக்ஸிலா என்னுமிடத்தில் ஒரு பல்கலைக் கழகமிருந்தது. சமணர்களால் ஒரு பல்கலைக்கழகம் ஸ்தாபனம் செய்யப்பட்டிருந்தது. அப் பல்கலைக்கழகம் பின்னர் ஒரு காலத்தில் கடலில் ஆழ்ந்துவிட்டது. பின்னர், காசியில் ஒரு பிரக்யாதிபெற்ற சர்வ கலாசாலை யிருந்தது.

டாக்ஸிலா பல்கலைக் கழகத்தில் 10000 மாணுக்கர்கள் கல்வி கற்று வந்ததாகத் தெரியவருகிறது. 16 வயதிற்குட் பட்டவர்கள் மேற்கூறிய பல்கலைக்கழகத்தில் சேர்த்துக் கொள்ளப்படுவதில்லை. மாணவர்கள் தங்களுக்கு இஷ்டமான பாடங்களைப் பயின்று கொள்ளலாம். ஆனால் அவர்கள் தங்களுடைய ஆசிரியர்கட்கு மிகவும் பணிவுடன் நடந்து கொள்ளவேண்டும். டாக்ஸிலா பல்கலைக்கழகத்தில் முக்யமாக வைத்திய சாஸ்திரபோதனை செய்யப்பட்டு வந்தது.

## அரசன் பட்டம் வழங்கும் காலம்

இந்தியாவின் கிழக்குப் பகுதியில் பௌத்த பல்கலைக்கழகங்களும், ஹிந்து பல்கலைக் கழகங்களுமிருந்தன. ஆனால் ஹிந்து பல்கலைக் கழகங்களில் வகுப்பு வித்தியாசங்கள் பாராட்டியே கல்வி புகட்டப்பட்டது. பௌத்த பல்கலைக்கழகங்களில் வகுப்பு வித்தியாசங்களென்பதே கிடையாது. மாணுக்கர்கள் கல்வி பயிலும் காலத்தில் பரிக்ஷை செய்யப்பட மாட்டார்கள். ஆனால் அவர்கள் இறுதியாகவுள்ள பரீக்ஷையில் தேறவேண்டும். அவ்வாறு பரீக்ஷையில் தேறியவர்கட்கு அரசனே யோக்கியதா பட்டங்கள் வழங்குவது வழக்கம்.

—தமிழ் நேசன்.

---

# ஓர் சிற்றுரை

[ஆசிரியர்: ராமசுப்பிரமணிய நாவலர்]

வாழ்க வந்தணர் வானவ ரானினம்
வீழ்க தண்புனல் வேந்தனு மோங்குக
ஆழ்க தீயதெல் லாமர னுமமே
சூழ்க வையக முந்துயர் தீர்கவே.

வாழ்க அந்தணர் வானவர் ஆனினம் என்றது - அந்தணரும் வானவரும் ஆனிரையும் வாழ்கவென்றவாறு. வீழ்கதண்புனல் என்றது - தட்பமுடைய புனல் வானின்றும் வீழ்வதாகவென்றவாறு. வேந்தனு மோங்குக என்றது - (உலகை நன்னெறிக் கணின்று ஆட்சிபுரியும்) அரசனும் (அனைத்து வளப்பங்களும் பெற்று) ஓங்குகவென்றவாறு. ஆழ்க தியதெல்லாம் என்றது - தீமை பயப்பது முற்றும் ஒழிகவென்றவாறு. அரனுமமே சூழ்க வென்றது - (அந்தமிலின்பத் தழிவில் பொருளாய் நிலவாநின்ற) சிவ பிரான்றன் பெயரே யாண்டுஞ் சூழ்கவென்றவாறு. வையக முந்துயர் தீர்கவே என்றது - இந்நிலவுலகம் துன்ப நீங்கப்பெறுக வென்றவாறு. இஃது ஒருவாற்றாற் கண்ணழித் துரைத்தவாறு.

இதனுள் 'வாழ்க வந்தணர்' என அந்தணரை முற் கூறியது அவராற்றானே ஏனைச் சிறப்புக்களும் நிலவுதலான் என்க. அஃதா மாறு யாங்ஙனமெனின், அந்தணர் வாழா விடத்து அவர் தொழில் முற்று மொழியும், தொழிலொழியவே அவற்றானெய்தும் பய னெல்லா மொழியும், பயனொழியுங்கால் சிறப்பின்றாய் முடியுமாகலி னென்க. அந்தண ரோத்துடைய ராகலின் அவர் அது கொண்டு செய்வன செய்யாவிடத்து வானம் வறக்குமென்பது ஒருதலையா மென்றுணர்க. "சிறப்பொடு பூசனை செல்லாது வானம்—வறக்கு மேல் வானோர்க்கு மீண்டு" என்ப வாகலான் வானம் வறக்கு மிடத்து வானோர்க்குஞ் சிறப்பும் பூசனையுஞ் செல்லாதொழிதலின் வானோர்க்கு மேற்ற மின்றென்க. அன்றியும் உலகினருள் நிலவா விடத்தும் சிறப்பு முற்றுங் குன்றுதலுறு மாகலின் அவ்வருள் இன்றியமையாதாயிற்று. அவ்வருளைப் பூண் டொழுகுபவருட் டலை சிறந்தா ரந்தணரே யாகலின் அவ்வந்தணர் வாழ்த்து முன் னர்க் கூறப்பட்ட தென்பதூஉமாம். இதனானன்றே தெய்வப்

பெரும் புலவரும் "அந்தணரென்போ ரறவோர் மற்றெவ் வுயிர்க்குஞ்—செந்தண்மை பூண்டொழுக லான்" என்றதூஉ மென்க. ஆயினும், வானவர் வாழ்த்தை முற்படக் கிளத்தின் ஆண்டுறு மிழுக்கென்னையோ வெனின், ஈண்டு அந்தணரே வான வர்க்கொப்பாகக் கொள்ளப் படலானும் அரசர்முதல் யாவரும் அவர்க்கே முதன் முதல் வணக்கஞ் செய்வதனானும் அவருதவி கொண்டே யாம் சிறப்பெய்துதல் வேண்டுமாகலினானும் "கரிய மாலினுங் கண்ணுதலானினும்— முரிய தாமரை மேலுறை வானி னும்—விரியும் பூதமோ ரைந்தினு மெய்யினும்—பெரிய ரந்தணர்" எனப் பிறருங் கூறிப் போந்தமையானும் அந்தணர் வாழ்த்தை முற் கூறுதலே சிறப்புடைத்தாமென்க. பிறரும் 'மல்குக வேத வேள்வி' என அந்தணரானியலுந்தொழிலை முற்படக் கிளத்தியவா றுணர்க. இவ்வாறு முனிவர் வாழ்த்துக் கூறப்பட்டது.

வானவர் உலகத்தார் இயற்றும் சிறப்பையும் பூசனையையு மேற்று அவர்தம் வேண்டுகோளை முற்றுவிப்பாராகலின் அவர் வாழ்த்து அந்தணர் வாழ்த்திற்குப் பிற்படக் கூறப்பட்டது. நீரைக் குறித்து வருணனையும் நெருப்பைக் குறித்து அக்நி தேவனையும் மழையைக் குறித்து இந்திரனையும் இன்னுமொவ்வொன்றைக் குறித்துப் பற்பல தேவர்களையும் வேண்டுதல் வழக்குப் பெற்ற வாறுங் கண்டு கொள்க. ஆகவே, வானவரை வாழ்த்துதல் கடப் பாடாயிற்று. இஃதன்றி வானவரெனவே மேலவர் எனப் பொருள் படுதலான் நடுவுலகத்தாராய நாம் உம்பருற்றாரை வாழ்த்துதன் முறைமையெனக் காண்க. வானவரான் அவ்வவர் ஆற்றலுக் கியைய ஆக்கமு மழித்தலும் நிலைபெறுத்தலுங் கூடுமாகலின் அவரை வாழ்த்துதல் சிறப்பெய்துமாற்றான் உரித்தாயிற் றென்க.

ஆனினம் பஞ்சகவ்விய மளித்து முனிவர்க்குப் பெரிது முதவலானும், மகத்தின்கண் ஆவிற்கே மிக்க சிறப்பை யளித்தலா னும், விலங்கினங்களுள்ளும் ஆவொன்றுமே மிகச் சிறந்து விளங் கலானும், ஆவின் கால்களான்குமே நான்கு வேதங்களாமெனச் சான்றோர் சிறப்பித்தலானும், ஏனை உறுப்புக்களையும் பலவாற்றான் விதந்து கூறுவதனானும், அந்தணர்கொலை பெண்கொலை முதலிய வற்றோடு ஆவைக் கொலை செய்தலு மொருசேர எண்ணப்பட லானும், பெரியோருமாவைப் போற்றுதலானும் 'ஆனினம் வாழ்க' வென வாழ்த்துக் கூறப்பட்டது.

ஈண்டு "மானங் குலங்கல்வி வண்மை யறிவுடைமை—தானந் தவமுயற்சி தாளாண்மை—தேனின் கசிவந்த சொல்லியர் மேற் காமுறுதல் பத்தும்—பசிவந் திடப்பறந்து போம்" எனவும் "ஆற்றுவா ராற்றல் பசியாற்றலப் பசியை—மாற்றுவா ராற்றலின் பின்" எனவும் "அற்றாரழிபசி தீர்த்தல்" எனவும் கூறப்பட்டமையின் பசித்துன்பமே துன்பத்துட்டுன்ப மென்பது பெற்றாம். "விண்ணின்று பொய்ப்பின் விரிநீர் வியனுலகத்—துண்ணின் றுடற்றும்பசி" யாகலின், அப்பசியைத் தீர்த்தற் சிறப்புடையது மழையேயா மென்பது போதாலின் 'வீழ்கதண்புனல்' என்றார். "வானின்றுலகம் வழங்கிவருதலாற்— றானமிழ்த மென்றுணரற் பாற்று" என்பவாகலின் 'தண்புனல்' என விசேடித்தார் என்க. "வழங்குக சுரந்துவானம்" எனப்பிறர் கூறியதூஉங் காண்க.

"வானோக்கிவாழு முலகெல்லா மன்னவன்—கோனோக்கி வாழுங்குடி" எனவும் "அந்தணர் நூற்கு மறத்திற்கு மாதியாய் —நின்றது மன்னவன் கோல்" எனவுங் கூறுபவாகலின், உலக மாட்சிக் கின்றியமையாத செங்கோலை யுடைய மன்னவன் சிறப்பு நோக்கி 'வேந்தனு மோங்குக' என்றார். 'புரவலன் செங்கோல் வாழ்க' வெனப் பிறருங் கூறினார். வீழ்க ஓங்குக என்பன இரண்டு முரண்பட்ட சொற்களாயினும் அவற்றின் பொருண்மையால் பய னில் ஒப்புமை காண்டலின் வேந்தனு மென்பதனும்மை இறந்தது தழீஇய தென்க.

உலகிற் பாவத்திற் கிடனாய தீவினைகளும் தீமையை விளைப் பனவாய பிறசமயங்களும் ஒழிவனவாக வென்பார் 'ஆழ்க தீய தெல்லாம்' என்றார். 'வாழ்க அந்தணர்' என்பது முதலாக்கூறப் பட்டன வெல்லா முற்றுதற்குத் தீமை ஒருதலையா வகலவேண்டு தலின்றியமையாததாகலின் அவற்றின் மாறாய தீயனவெல்லா மாழ்க வெனப்பட்டது. அன்றியும், தீயனநிலவுங்கால் நல்லன சிறவாமையும் அதனால் அவை பேணப்படுத லொழிதலு முளவா மென்பது முணர்க. தீயன விருந்த குறியுங் காண்டல் கூடாதென் பார் 'ஆழ்க' வென்றார். தீயது என்பது தீமை என்னும் பண் படியாப் பிறந்த பெயர். தீயதெல்லாம் - ஒருமையிற் பன்மை வந்த வழுவமைதி.

உயிர்க்கெல்லா மின்பத்தைச் செய்பவன் அரனாகலான் 'அரனாமமே சூழ்க' வென்றார். இறுதிக் காலத்து பிரமா,

விட்டுணு முதலிய தேவர்களையுந் தனதகத் தடக்கு மாற்ற லுடையா ரென்பது தோன்ற 'அரன்' எனக் கூறப்பட்டது காண்க. 'நாமமே' வென்றமையான் பிறசமயக் கடவுளரின் நாமம் புறக்கணிக்கப் பட்டவாறுணர்க. 'சூழ்க' வென்றமையின் உலகமுற்று மரனுமம் பரவிச் சூழ்க வென்பது பெறப்பட்டது.

மேற்கூறியனவெல்லா நிலவுமிடத்து உலகம் துன்ப நீங்கல் ஒருதலையாகலின் இறுதியில் 'வையகமுந் துயர்தீர்கவே' என்றார். "இருள்சே ரிருவினையுஞ் சேரா விறைவன்—பொருள்சேர் புகழ் புரிந்தார் மாட்டு" என்பவாகலின், அரனுமஞ் சூழலான் இரு வினையு மொழிதலின் 'துயர் தீர்க' எனப்பட்டது. நல்வினையும் பிறப்பிற்குக் காரணமாதலான் துயர் எனப்பட்டது. இங்ஙனம் கொள்ளுமிடத்துத் துயர் தருவதனைத் துயர் என்றவாறாயிற்று. வையகம் என்பது பொருளனைத்தும் வைக்கு மிடமெனப் பொருள் படலான் காரணப்பெயர் என்பது பெற்றாம். வாழ்க வென்பது முதலிய ஆறும் வியங்கோள். ஏ. ஈற்றசை.

---

# அருஞ்செய்யுட் பொருட் பகுதி

## கொண்டுகூட்டுப் பொருள்கோள்

[சென்னை, கோ. இராமலிங்கத்தம்பிரான் அவர்கள்]

### திருவெங்கைக் கலம்பகம்

(20-வது செய்யுள்)

நேரிசை வெண்பா

எடுக்குமான் வெங்கையிறை யேந்திழாய் நின்னெஞ்
சடுக்குமால் பங்கினள்கே ளாமற்-கெடுக்கவே
காதின் மறையாய்நின் கண்போன்ற தாதலா
லோதுஞ் செயல்பா ருவந்து.

(இ-ள்) ஏந்து இழாய் - ஏந்திய ஆபரணத்தையுடையவளே! வெங்கை இறை எடுக்கு மான் - வெங்கையில் எழுந்தருளிய பழமலைநாதர் கையில் ஏந்திய மான், நின் கண்போன்றது - நின்கண்

களை யொத்தது, ஆதலால் - ஆதலினுல், நின் நெஞ்சு அடுக்குமால்-நினது மனத்திற் றங்கிய மயக்கத்தை, கெடுக்க-ஒழிக்க, பங்கினள் கேளாமல் - (சிவபெருமானது) இடப்பாகத்தைக் கொண்ட உமா தேவியார் கேளாதவண்ணம், காதில் - (பழமலை நாதரது) காதினிடத்தில், மறையாய் - இரகசியமாய், ஓதும் செயல் - (உன்னைப் பற்றிச்) சொல்லுகின்ற செய்கையை, உவந்து பார் - மகிழ்ந்து பார்; நீ என் வீணுய்க் கவலையுறுகின்ருய்? எ-று.

(வி-ரை) இச் செய்யுள் கொண்டுகூட்டுப் பொருள்கோள்-கொண்டுகூட்டுப் பொருள்கோளாவது பல அடிகளிலும் நின்ற சொற்களை ஏற்றபடி கொண்டு கூட்டுவதாம். ஏந்திழாய்! வெங்கையிறை எடுக்குமான் நின்கண்போன்றது; ஆதலால் நின் நெஞ்சு அடுக்குமால் கெடுக்கவே பங்கினள் கேளாமற் காதின் மறையாய் ஓதுஞ் செயல் உவந்து ப்ார் எனக் கொண்டு கூட்டுக. இது தோழி கூற்று. கற்புடைய மனைவி நாயகனது எவ்வகைப்பட்ட குற்றத்தினைப் பொறுக்கினும் பொறுப்பள்; பிற மங்கையொடு கலத்தலை மட்டும் பொருளாதலால், "அடுக்குமால் பங்கினள் கேளாமற் கெடுக்கவே மறையாய் ஓதுஞ் செயல் பாருவந்து," என்ருர். பங்கினள் என்றது உமாதேவியாரை. மறை - இரகசியம். நீ என் வீணுய்க் கவலையுறுகின்ருய் என்பது இசையெச்சம்.

---

# உலகம் எங்கே செல்கிறது?

(காழி. சிவ. கண்ணுசாமி, B.A.)

ஒரு மோட்டார் வண்டி ஓடுவதைப் பார்ப்போமானுல் அவ் வண்டி எப்பக்கம் நோக்கிச் செல்கிறதென்பதை நாம் உடனே உணர்ந்துகொள்கிறோம்.

மோட்டார் வண்டி ஓடுகிறதை மட்டுமன்று, அது ஒரு குறிப்பிட்ட இடத்தை நோக்கி யோடுகிறதையும் பார்க்கிறோம். ஆகவே அது ஓடுவது ஒரு செய்கையே யாயினும், தெரிந்து செய்த செய்கையே யாகும். மேலும், நாம் ஓடுகிற மோட்டார் ஒன்றைப் பார்த்த உடனேயே அதன் இயந்திரத்தை யியக்குபவன் உள்ளே இருக்கிருன் என்பதையும், அவன் உள்ளே இருந்துகொண்டு

அவ்வண்டியின் வேகத்தைத் தன்னிச்சைப்படி யடக்கி யாண்டு ஒரு குறிப்பிட்ட இடம் நோக்கி யோட்டிச் செல்கிறுனென்பதையு மறிந்து கொள்கிறோம். வேகத்தை யடக்கியாள்வது மனதிற் பதியக்கூடியதா யிருந்தாலும் அவ்வண்டியைக் குறித்த இடம்நோக்கிச் செலுத்துவது விந்தையாகவே தோன்றும்.

ஆயினும் மனிதனது அறிவு வன்மையினுல் கண்டுபிடிக்கப் பட்ட ஒரு இயந்திர விளையாட்டுக் கருவியை நோக்குவதினின்றும் திரும்பி அதைத் தோற்றுவித்தவனும் கண்டுபிடித்தவனுமாகிய மனிதனையே நோக்குவோம். அவனே கால சக்கரத்தினூடே கடந்து வருகிறவன். அவனது வாழ்க்கை அறிவறிந்த தொன்ருகுமா, ஒரு இலக்கு நோக்கிச் செல்வதாகுமா என்று எளிதிற் கூறமுடியாது. ஒரு நீர்நிலையைச் சுற்றிக் கொதுகுகள் ஒரு காரணமுமின்றி வட்டமிட்டுக் கொண்டிருப்பதைப் பார்க்கிறோம்; அவைகள் அவ்வாறு வட்டமிடுவது எங்கு செல்வதற்காக என்ருல் தெரியாது ; ஆனல் ஆகாயத்தில் பறந்து செல்லும் ஒரு ஆகாயக்கப்பலும், தெருவினூடே பறந்து செல்லும் ஒரு மோட்டார் வண்டியுமோ எனின் ஏதோ ஒரு குறிப்பிட்ட இலக்கை நோக்கியே செல்கின்றன. நாம் மனிதனது வாழ்க்கைச் செலவை யுற்று நோக்குங்கால் மேலே நாம் கூறிய கொதுகின் வட்டமிடுதலுக்கே அதை ஒப்பிட வேண்டுமென்றே நினைக்கிறோம்.

என் ? மனிதன் எவ்விலக்கு கருதிச் செல்கிறுன் என்ருல் நிச்சயமான பதிலொன்றும் அளிக்க முடியவில்லை. கூட்டமாகப் பறந்து செல்லுந் தேனீக்களைப் பார்த்தால் அவைகள் தேனடையை நோக்கிப் பறந்து செல்கின்றன என்ருவது சொல்லலாம். மனிதனே கூடுவிட்டுக் கூடு பாய்வதுபோல் ஒரு நிலையை விட்டு மற்றெரு நிலைக்கு மாறிக்கொண்டே போகிருன். போகிற போதே தன்னுடைய நடையுடை பாவனைகளையும் பேசும் பேச்சுகளையுங்கூட மாற்றிக்கொண்டே போகிருன்.

ஆகவே இதை இன்னுஞ் சிறிது கூர்ந்து ஆராய்வோம். அதற்குமுன் இரண்டுவித கூட்டத்தார்களது வார்த்தைகளுக்குச் செவி சாய்க்காது அவர்களை ஒதுக்கிவிடுவோமாக. ஒரு வகையோர் "எல்லாம் நன்மைக்குத்தான்; உலகம் நன்கே சென்று வாழ்க்கை பரிபூரணமடையப் போகிற" தென்று சொல்லும் வினை

யாட்டு மனிதர்கள். மற்ற வகையினரோ வென்றால் "உலகம் பாழா ய்ப் போகிறது" என்று சொல்லும் அழு மூஞ்சிக் கூட்டத்தார். இவ்விரு கூட்டத்தாரும் ஒருபுறமாக ஒழியட்டும், நாம் நடுநிலைமை வகித்து ஆராய்வோம்.

"நாகரிகமென்பது என்ன? மனித சமூகம் முன்னேற்ற மடைய முயல்வதே நாகரிகம் என்று வைத்துக்கொள்வோம்". மனித சமூகத்தின் ஆசைக்கு ஓர் அளவில்லை; திருப்தி என்பதே கிடையாது, ஆகவே எக்காலத்திலும், எந்நிலையிலும், அது மேற் பட்டதாகிய மற்றொன்றையே நாடி நிற்கும்; உள்ளதைக்கொண்டு திருப்தி யடையுங் குணம் அதனிடம் இல்லவே யில்லை. ஒன்றின் மேலொன்றாகத் தனக்கு வேண்டியதைப் பெற முயன்று பூரண நிலையை யடையவே பாடுபடுவதாக விருக்கிறது. உதாரணமாக ஒரு காலத்தில் எல்லோரும் வாகனம், வண்டி என்பதில்லாமல் கால்நடையாகவே நடந்து வந்திருக்கிறோம். அக்காலம் மாறிக் குதிரைகளைப் பழக்கிச் சவாரி செய்துவந்தோம். அதுவும் போய்ப் புகை வண்டியாயிற்று. அதற்குமேல் மோட்டார் வண் டிகளும், ஆகாயக் கப்பல்களும் வந்துவிட்டன.

மனித சமூகம் இயங்கவில்லை யென்று யாராவது சொல்ல முடியுமா? இல்லை, அவ்வியக்கத்தினால் முன்னேற்ற மடைய வில்லை யென்றாவது சொல்ல முடியுமா? புலி, கரடியைப்போல் குகைகளில் வசித்துவந்ததற்கும், இப்பொழுது மின்சார விளக் கும், தண்ணீர்க் குழாயும், "எலக்டிரிக் லிப்ட்களும்" உள்ள விநோத மான உண்டிச் சாலைகளில் வசிப்பதற்கும் வித்தியாச மில்லையா? ஆம். உழைத்தோம், மேலேறினோம், எதோ ஒருவகையில் முன் னேற்ற மடைந்திருக்கிறோம். இப்பொழுது யாரையாவது மறு படியும் 'நீ போய்க் குகையில் வசித்துவா' என்று சொன்னால் போவார்களா? மாட்டார்க ளன்றோ?

## இலக்கற்ற இயக்கம்

இவ்வளவு தூரம் மனித சமூகம் முன்னேறியதாகக் கருதப் பட்டு வந்திருக்க, 1927-ம் ஆண்டு பிரிட்டிஷ் சங்கமொன்றில் சொற்பொழிவு நிகழ்த்திய ஒருவர் தென்னாப்பிரிக்காவில் உள்ள ஒரு காட்டு மனிதன் நாகரிகமடைந்த மனிதனைவிட மிகவும்

ஆனந்தமாக இருக்கிறான் என்று கூறினர்; அதாவது நாகரிக மிருந்த ஒரு ஐரோப்பியனே அவன் வெற்றிகொண்டவன் என்ப தாயிற்று.

'என்ன இப்படி உளறினர்? நாம் இவ்வளவு கஷ்டப்பட்டுக் கண்டுபிடித்த பெரிய பெரிய விநோதமான நாகரிகக் கருவிகளை யெல்லாம் நெருப்பிலிட்டுக் கொளுத்திவிட்டுச் சந்தோஷமாய்க் காட்டுக்குச் சென்று மிருகங்களோடு மிருகமாய் வசித்து வர வேண்டுமென்று கூறினரா என்ன?' என்று நினைக்கலாம். இல்லை; அவர் அப்படி முட்டாள்தனமாய்க் கூறவில்லை. அவரோ பெரிய புத்திசாலி, பரந்த அறிவாளி, ஆழ்ந்து சிந்திக்கும் ஆற்றலுடைய வர். அவர் நாகரிகத்தைப்பற்றி அவ்வாறு இழித்துக் கூறியதின் கருத்தென்னவென்றால், மனிதன் தன்னைச் சூழ்ந்துள்ள சிக்கல் களை யறுத்தெறிவதைவிட அதிகமான சிக்கல்களைப் புதிது புதி தாக உண்டுபண்ணிக்கொள்கிறான் என்பதே. நாம் வாழ்க்கை யின் கருவிகளைச் சீர்திருத்தி வருகிறோமே யொழிய அக் கருவிகட் குரிய கர்த்தாவைச் சீர்திருத்துகிறோமில்லை. வாழ்க்கைக்குரிய சாதனங்களை ஒன்றுபலவாகப் பெருக்கி யமைத்துக் கொள்ளுகி றோமே யொழிய உண்மை வாழ்க்கையில் ஒரு பெரிய மாறுதலையும் செய்துகொள்கிறோமில்லை. நாகரிகத்தில் பெரிய புரட்சியிருப்பது உண்மைதான். ஆனாலும் எந்த ஒரு குறிப்பிட்ட நோக்கங் கருதி யோ இலக்குகருதியோ அப்புரட்சி யுண்டாவதில்லை யென்பதும் உண்மையே. நாகரிக மடைந்த மக்கள் ஒரு இலக்கும் இல்லாமல் முன்னேறுகிறார்கள் என்பதற்கு ஒரு உதாரணம் கூறுகிறோம். மகா யுத்தம் நடந்ததினால் நேர்ந்த கஷ்டத்திலிருந்து ஐரோப்பா தேசம் இன்னும் சரிவர விடுபடவில்லை. தோற்றவர்கள் எப்படி தண்டனை யடைந்தார்களோ அதே வண்ணம் வெற்றிகொண்ட வர்களும் தண்டனை யடைந்தார்களென்பதை அந்த யுத்தம் மெய்ப்பித்துவிட்டது. சண்டையில் கோடிக்கணக்கான மக்கள் இறந்தார்கள்; கோடிக்கணக்காகக் காயமடைந்தார்கள்; கோடிக் கணக்கான பொருள் கொலைக்கருவி செய்யும் உலைக்களத்தில் கொட்டப்பட்டது. அப்படி யிருந்தும் யாராவது ஒருவர் இனி மேல் யுத்தமென்பது நடக்காது, உலகம் அமைதியின் பக்கம் உறுதியாகத் திரும்பிவிட்டதென்று சொல்ல முடியுமா? இறந்தவர் கள் இது விஷயத்தில் வெற்றியடைந்தார்களோ இல்லையோ அது

தெரியாது. வெற்றியடைந்ததாக கூறிக் கொண்டவர்கள் சர்வ தேய ஒற்றுமையையும் அமைதியையும் நிலைநாட்டும் முயற்சியில் தோல்வியுற்றனர் என்பது உண்மை. சண்டைபோடுவதனுல் அமைதியை நிலை நாட்டலாம் என்ற ஒரு தத்துவம் இவ்வாறு காலை வாரியடிக்கப்பட்டது. வீணுக கோடிக் கணக்கான மக்கள் மாண்டதுதான் மிச்சம்.

## எங்கே செல்கிறது ?

நாகரிகத்தின் தன்மை என்ன என்பதைச் சாவதனமாகப் பார்ப்போமானுல் அதன்கண் காணப்படும் குழப்பமும் துன்பங்களும், ஒரு இலக்கு வைக்காமலும் முடிவு இன்னதென்று குறியாமலும் முயலுவதனுலேயே விளைகின்றன என்பது புலப்படும். மனித சமூகம் இன்னதுதான் செய்யவேண்டும் இன்னதை நோக்கித்தான் செல்லவேண்டும் என்பதை யுணராமல் முன்னேற முயலுவதனுல்தான் குடியாட்சி முறை வெற்றி பெறவில்லை. பெரிய பெரிய புத்திமான்கள் என்போரெல்லாம், இருப்பதை யப்படி யிப்படிச் சீர்ப்படுத்துவதிலும், ஒன்றிரண்டு இல்லாததைச் சேர்த்துக்கொள்வதிலுமே கவலையாயிருக்கிருர்களே யொழிய ஒன்றை யெடுத்துச் சரிவர முடிக்கவேண்டுமென்ற கவலையுடையவர்களாகத் தோன்றவில்லை. நாம் எங்கே செல்கிரும் என்று ஒருவருங் கேட்பாரில்லை, ஏன் தான் போகவேண்டுமென்று கேட்பவருமில்லை. எங்கேயாவது ஒருபுறம் போய்கொண்டிருந்தால் போதுமென்றே தோன்றுகிறது போலும்!

## நாகரிக ஊழல்கள்

நாகரிகத்தினுல் உண்டாகும் ஊழல்களையெல்லாம் ஒருவரும் கண்திறந்து பார்ப்பதாகக்கூடக் காணும். தொழுநோய் மலிந்த பேதை மக்கள் பலர் மருத்துவச் சாலைகளில் குவிந்து கிடக்கின்றனர்; சிறையிலும் சிறைப்பள்ளிச் சாலைகளிலும் சமூகத்தைக் கெடுக்கப் பிறந்த கொடியர்களும் திருடர்களும் குடியாய்க் கிடக்கின்றனர்; சந்து பொந்துகளில் மந்தை மந்தையாக ஆதாரவற்ற ஏழை மக்கள் கூடிக் கிடக்கின்றனர். முதலாளிமார்களுக்கும், தொழிலாளிகளுக்கும் நடக்கும் வாதத்தை நாம் கவனிக்கிருமா?

மதத்தில் எற்பட்டிருக்கும் சமயச் சண்டைகளை நோக்குகின்ளுமா? நாடக மேடை அநாகரிகமான ஆபாசக்களஞ்சியமாக மாறினதை யாராவது கவனிக்கிருமா? வீண் காலப்போக்குக்காக மக்கள் நியாயமற்ற வழியில் செல்வதைச் சிந்தித்துப்பார்ப்பதில்லை. எவ்வளவு மதுபானக் கடைகள்? எவ்வளவு சூதாங்குகள்? இந்த ஊழல்களையும் ஆபத்துகளையும் ஒரு சிறிதும் கவனியாமல் பூனையைப்போல் கண்களை மூடிக்கொண்டு "எப்பொழுதோ ஒரு காலத்தில் நாம் காட்டுமிராண்டிகளாய் இருந்தோமென்பது உண்மையே. இப்பொழுது நாகரிக மிகுந்தவர்களாகிவிடவில்லையா?" என்று இறுமாப்புக்கொள்கிருேம்.

இந்த அவகேடுக ளெல்லாம் மனித சமூகத்தின் இலக்கு இன்னது என்று குறித்துக்கொள்கிற வரையில் இருந்துதான் தீரும். முன்னேற்றம் முன்னேற்ற மென்ருேடிச் சேற்றிலழுந்தாமலும், குழியில் விழாமலும் இருக்கவேண்டுமானுல் இந்த நாகரிகமென்பதில் நாம் ஒரு உயர்ந்த ஒப்பற்ற தத்துவ ஒழுக்கத்தை யடிப்படையாகக் கொண்டிருத்தல் வேண்டும். மனித சமூகம் அமைதியும் ஆனந்தமுமடைய வேண்டியதற்கான நிலைமை யென்ன என்பதை உணர்ந்து அதற்கேற்றவாறு சட்டங்களை யமைத்துக் கொள்ளவேண்டும்.

## போர் நீதி

உதாரணமாக, நோய் என்பது துன்பந்தருவது; அதனுல் மனித சமூகத்தின் இன்பத்திற்கே அது சத்துருவாகும் என்று ஒப்புக்கொள்ளப்பட்டதாகும். ஆகவே நோயை விருத்தி செய்துவா முயலும் ஒவ்வொருவனும் மனித சமூகத்தின் எதிரியாகவே கருதப்பட்டுத் தண்டனைக்கு முள்ளாகிருன். அதுபோலவே, போர் என்பதும் மனித சமூகத்தின் சத்துருவாகுமெனத் தீர்மானித்து அதை விருத்தி செய்ய முயல்வோரை யேன் தண்டிக்கக் கூடாது? அதுவுந் திருட்டைப்போலப் பெருங்குற்றமாவதொன்றன்ருே?

சூதாடுவதும் மற்ருெரு தீங்கல்லவா?

ஆகவே இவற்றைக்கொண்டு மக்கள் இன்புற்றிருக்க நோயின்மையும், திருட்டின்மையும், கல்வியும், நீதியொழுக்கங்

களுக்குக் கட்டுப்பட்டு நிற்குந் தன்மையும் அவசியமாகும் என்று தீர்மானிப்போமானல், அதற்குத் தக்கவாறு சட்டங்களை யொழுங்காக ஏற்படுத்தி நாகரிகத்தின் ஊழல்களையு மொழிக்க முடியாதா? நமது முயற்சிக்குரிய ஒரு சிறந்த இலக்காகவும் அது இருக்காதா? மனித சமூகம் அந்த இலக்கை நோக்கியே முன்னேறிச் செல்ல வேண்டுமென்றும் ஒரு வரையறை யேற்படாதா?

இவ்வளவு எளிதாகவும் தெளிவாகவும் நமக்கு ஒரு இலக்கிருக்க என் இன்னும் குழப்பச் சேற்றில் கிடந்து எப்பொழுதும் போர் என்றும் புரட்சி யென்றும் கனுக்கண்டு உழல்கிறோம்? ஆ! இவ்வுலகம் எங்கே செல்கிறது!!!

—மை மேகஸீன்.

---

# பிரிவாற்றுமை.

திருவாளர்

மே. சொ. வைத்திலிங்கக் கவிராயர் அவர்கள்

சேங்கோட்டை.

திருநெல்வேலி ஜில்லா மேலகரம் மாட்சிமிக்க திரிகூட ராஜப்பக் கவிராய ரவர்கள் வழித் தோன்றலாரும், திருநெல்வேலி ஹிந்து காலேஜ் தலைமைத் தமிழாசிரியருமாகிய திருவாளர் மே. சொ. சுப்பிரமணியக் கவிராயரவர்கள் நிகழும் மெய்கண்டான் யாண்டு 710 ஐப்பசி 21 ஞாயிறு இரவு மண்ணுலகு நீத்த செய்தி கேட்டு இக் கழகத்தார் வருந்துகிறார்கள்.

திரு. கவிராயரவர்கள் தங்கள் வாழ்நாளில் சிவநெறித் தொண்டும், செந்தமிழ்த் தொண்டும், செய்து பலரையும் நல்வழிப் படுத்தியமை பாராட்டற் குரித்து. இவர்கள் எங்கள் தென்னிந்திய தமிழ்ச் சங்க முதற் புலவர் குழுவில் ஒருவரா யிருந்து தேர்வுகள் நடத்துவதற்கு உதவி புரிந்தமையும் போற்றற் குரியது.

கவிராயரவர்களிடத்தில் அமைந்திருந்த எவருங் கண்டு களிக்கத்தக்க இன்முகம் இன்சொல்லுடைமை முதலிய சிறந்த பணிவுகள் மற்றொரு தமிழ்ப் புலவரிடத்திற் காண்டல் அரிது. இன்னார் பிரிவு தமிழுலகத்திற்கே துன்பந் தருவதாகும்.

கவிராயரவர்கள் உயிர்க்கு இறைவன் இன்ப வாழ்வு அருள்வானாக. அன்னார் குடும்பத்தார்கட்கும் இறைவன் ஆறுதலளிப்பானாக.

M. V. NELLAIAPPA PILLAI,
*President.*

---

# மதிப்புரை

## கல்வி நூல்

(இயற்றியோர் திரு. எஸ். கே. இராஜசிங்கம் B. A.)

கற்றல், நன்கு கற்றற்குரிய சாதனங்கள், கற்போன், கல்வியும் அதன் பயனும், ஆசிரியன், கலைகள், கற்பித்தல், புதிய கல்விமுறைகள், பாடசாலை, புலப்பயிற்சி, உடற்பயிற்சி, கைவேலை என்ற தலைப்புக்களின் கீழ் கல்வியையும் கல்வி முறையையுங் குறித்துத் தமிழில் எழுந்த முதல் நூல் இதுவேயாகும். இந்நூற்போக்கும், அநுபந்தமும் ஆசிரியர்க்குள்ள தமிழ் மொழி ஆங்கிலமொழிப் புலமையை நன்கு தெரிப்பனவாகும். இத்தகைய பயன்றரும் பல நூல்களை இவ்வாசிரியர் மேலும் மேலும் எழுதி நாட்டிற்கு நன்மை யளிப்பார் என நம்புகிறோம். விலை தெரியவில்லை. வேண்டுவோர். திரு. எஸ். கே. இராஜசிங்கம் B. A. அஸிஸ்டெண்ட் சூப்பரின்டெண்டெண்ட், கவர்ன்மென்ட் டிரெய்னிங் ஸ்கூல், யாழ்ப்பாணம் என்ற விலாசத்திற் கெழுதிக் கொள்ளவும்.

---

